# Science in Spirituality



ஓட்டங்கள்










ஓட்டங்கள்

By

N.Natarajan

அறிவியல் பார்வையில் ஆன்மிகம்

# Publishing Information

Title

Oottangkal **ஓட்டங்கள்**

(Tamil)

Year of first publication:

2015 Jan

Author:

**N.Natarajan**

natarajan.naga@gmail.com

After the First Book titled **Thedalgal,** In **Tamil,** This book can be thought of As a Second book useful to Understanding and benefit from Spirituality.

The Next book will take a serious seeker into first few practical steps to perceiving the Universe and God.

## எச்சரிக்கை

நான் ஒரு ஞானி இல்லை.

இந்த பக்கங்களில் நீங்கள் படிப்பது ,

நான் உணர்ந்து அறிந்தது இல்லை.

பல ஞானிகளின் கவிதைகளில், எழுத்துகளில்

வாக்குகளில் கிடைத்த செய்திகளில்

புதைந்திருக்கும் அறிவிலிருந்து, சேகரித்தது,

அப்படி சேகரித்த அறிவிலிருந்து,

இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற

ஒரு ஊகத்தால், உருவாக்கிய விளக்கம்.

இந்த வித ஆய்வு, விஞ்ஞானிகளின் பல

அணுகுமுறைகளில் முக்கியமான ஒன்று.

N.Natarajan

Comments & Questions are welcome.

# முன்னுறை

என் வாழ்வின் ஆரம்ப கட்டத்தில், அமானுஷ்யம் அல்லது மனித சக்திக்கு அப்பாற்பட்ட சில நிகழ்ச்சிகள் நடந்தன.

இந்த அதிசயங்கள் எப்படி நிகழ்ந்தன என்று சாதாரண அறிவைக் கொண்டு தேடி அலைந்தபோது, என்னையும் அறியாமல், நான் ஆன்மிகம் என்ற ஒரு பாதையை வந்தடைந்தேன்.

## *சாமியார்களைத் தேடி அலைந்தேன்!*

எனக்குத் தெரிந்தே, பல விதமான கோரிக்கைகளை மனதில் தாங்கி சாமியார்களைத் தேடி அலைபவர்கள் உண்டு. அதல்லாமல் ஏதோ ஒரு உந்துதலால் ஞானிகளைத் தேடி அலைபவர்களும் உண்டு. அப்படி தேடி அலைந்தவர்களில் நானும் ஒருவன்.

இந்த தேடுதலில், பலருக்கு ஏமாற்றங்களே கிடைத்தாலும், விடா முயற்சியுடன் தேடிய எல்லோருக்குமே ஞானிகள் கிடைத்தார்கள். வேறு சிலருக்கு தாங்களே ஞானிகளாகும் வாய்ப்பு கிடைத்தது

இந்த புத்தகத்தைப் படித்த பிறகு, யாருமே ஞானிகளை அல்லது சாமியார்களைத் தேடி அலைவதற்கு அவசியம் இருக்காது. அதோடு, போலிச் சாமியார்களால், வாசகர்கள் ஏமாற்றப்படுவது நிச்சயமாகத் தவிர்க்கப்படும்.

## *குழப்பலோ குழப்பல்*

எல்லா ஊர்களிலும், எல்லாக் காலத்திலும் சில நல்ல உள்ளம் கொண்ட மனிதர்கள், எப்போதுமே உண்டு. இவர்கள்

தங்கள் அரைகுறை அறிவையும் அறியாமையையும் பேரறிவாக நினைத்துக் கொள்வது மட்டுமில்லை, அதைக் கொண்டு தானும் குழம்பி மற்றவரையும் குழப்பி வருகிறார்கள். இதற்கு நானும் விதிவிலக்கில்லை.

இதில் மிகவும் முக்கியமாக ஒன்று ஆன்மிகமும் ஆத்திகமும் ஒன்றுதான் என்பது.

இவர்கள் ஆன்ம அறிவு, யோகா, தியானம், தாடிகள், காஷாய உடை, வாழைப்பழங்கள் ஆகியவற்றை ஆன்மிகத்துடன் சேர்த்துக் குழப்பி ஒரு பஞ்சாமிருதமாக விற்கிறார்கள்.

இந்தக் கலிகாலத்தில் எதுவும் விலை போகும். அதில் ஹை–டெக் ஆன்மிகம் மிகவும் பாப்புலர். அகில உலக அளவில் அதிக டிமாண்ட். கோடி கோடியாக டாலர்கள் கொட்டுவதைக் காண்கிறோம்.

## *மதங்கள் – மகான்கள்*

நம்மில் பலருக்கு சுயமாக எதுவும் தெரியாது. தெரிந்தவர் யாரும் எடுத்துச் சொன்னாலும் புரியாது. வாழும் காலத்தில் ஒவ்வொருவருக்கும் டன் அளவிலான துயரங்களும். குறைவில்லாத குறைகளும் நமக்கு என்றுமே உண்டு.

உலகின் பல பாகங்களில், இப்படிப்பட்ட மக்கள் மத்தியிலே மகான்கள் அவ்வப்போது தோன்றினார்கள். மகான்கள் மிகவும் மனிதநேயம் மிக்கவர்கள். இவர்களால் நம்மைப்போல அறிவின் குறைவுள்ள மக்கள் அவதிப்படுவதைக் காணச் சகிக்க முடியாது.

இப்படிப்பட்ட நல்ல உள்ளம் கொண்ட மகான்கள் நமது வாழ்க்கையை வலியில்லாமல் நடத்த சில வழிமுறைகளை வகுத்தார்கள். அதுதான் மதம். முக்கியமாக, அது உங்களைப் போல, என்னைப்போல உள்ள சாதாரண மக்களுக்காக உருவாக்கினார்கள்.

மனித வாழ்க்கை எப்படிப்பட்டது? தொல்லைகள் மிகுந்தது. மனமோ நம்மை எங்கெங்கோ இட்டுச் செல்கிறது. போகும் வழியிலே சில சமயம் மகிழ்ச்சிகள் கிடைத்தாலும் தவறாமல் தொல்லைகள் தொடர்கின்றன. நம்மை தொல்லைகள் ஏன் அழைக்காமலேயே வந்து அடைவது எப்படி என்று விளக்கினார்கள். அவைகள் எதுவுமே நமது மர மண்டையிலே சேரும் விதமான ஒரு சம்மாச்சாரமாக இல்லை.

சுலபமாக புரிந்து கொள்ள பல உதாரணங்களைச் சொன்னார்கள்.

மனித வாழ்க்கையை ஒரு இருட்டான, குண்டும் குழியுமான ஒரு நடைபாதை என்பதாக வருணித்தார்கள். இருட்டு என்பது அறியாமையைக் குறிக்கிறது. விளக்கை அறிவுக்கு உதாரணமாக சொன்னார்கள். நியாயம்தானே! விளக்கின் வெளிச்சம் இருட்டை அழிப்பதைப் போல, அறிவை அடைந்தால் அறியாமையால் வரும் கஷ்டங்களை தீர்க்கலாமே!

ஆனால் பல சிக்கல்கள். ஞானிகள் தரும் அறிவை முழுவதாக அடைவது அத்தனை சுலபம் இல்லை. அதைத் தடுக்க நமக்கு எக்கையில்லாத் தடைகள் உண்டு. விடாமல் தொடந்து சிந்திக்கும் போது, ஓரளவு பலன் கிடைக்க பல வருடங்கள் ஆகும். அறிவை அடைவது எல்லா மனிதருக்கும் கை வராது. அதனால் ஒரு ஏற்பாடு. விவச ாயி பல தொல்லைகளுக்கிடையே உணவு உற்பத்தி செய்ய நாமெல்லாம் தொல்லையில்லாமல் சாப்பிடுகிறோம். பலருடைய உழைப்பில் தயாரான வீட்டில்நாம் வாழ்கிறோம்.

சமுதாயத்தில் அறிவை மட்டுமே தேடுவதும் அதை மற்றவர்களுக்கு பகிர்ந்து தருவதற்காக சிலர் என்று வைத்துக்கொள்ளலாம்.

அவர்கள் தேடிய அறிவைக் கொண்டு மற்றவரை வழி

நடத்துவார்கள். அவர்கள்தான், குரு, அறிஞர்கள், பிலாசபர்கள், விஞ்ஞானிகள் எல்லோருமே! தான் அறிந்து நமது வழிகாட்டிகளாக வாழ்கிறார்கள்.

ஞானிகள்?

இவர்கள் மற்றவர்கள் போலவே அறிவதில் தொடங்கி, பல காலம் உழைத்து, மிகவும் அதிகமான, அரியதான அறிவை அடைந்தவர்கள். அறிவை விளக்கோடு ஒப்பிட்டோம் இல்லையா? அதே கணக்கில், அறிவைத் தேடும் விஞ் ஞானிகள் க௦௦௦ வாட் பல்பு என்றால், ஞானிகளை சூரியனின் வெளிச்சத்தோடு ஒப்பிடலாம். (நாமெல்லாம் ட்யூப் லைட்கள் தான் இல்லையா?)

இதற்கிடையே ரிஷிகள் முனிவர்கள் என்று ஒரு கூட்டம். இவர்கள் நம் புலன் ம்களில் சிக்காத அதே சமயம் நம்மை விட உயர்ந்த உயிர்களை ஒரு மாதிரியாக காக்காய் பிடிக்கும் உத்திகளில் கைதேர்ந்தவர்கள் என்று நாம் நினைக்க வழியுண்டு. புலன்களில் சிக்கும் பொருள் உலத்தில் கணக்கில்லாத தேவைகளை அடைய இவர்களால் உதவ முடியும்.

நாம் காணும் உலகத்தின் பதவிகள் தவிர, பல பதவிகளை ஞானிகளும் ரிஷிகளும் முனிவர்களும் தெரிந்து வைத்திருக்கிறார்கள். கண் காணா உலகங்கள் பல இருப்பதை நம்மால் நம்புவது சுலபம் இல்லைதான். ஞானிகளுக்கு நம்மை ஏமாற்றிப் பிழைக்க அவசியம் இல்லை. எனவே அவர்கள் பல உலகங்கள் இருப்பதாகச் செ ால்வதை நம்பலாம். அதில் மிக உயர்ந்த பதவியை ஈஸ்வர பதவி என்று குறிப்பிடுகிறார்கள்.

நமது கீழை நாடுகளின் கலாசாரத்தில் இந்த எண்ணங்கள் கரைந்து ஒன்றாகி விட்டதால் ஒருவர் சாதாரணமாக இறந்து விட்டாலே சிவனடியைச் சேர்ந்துவிட்டார் என்று சொல்லிக்

கொள்கிறார்கள்.

ரிஷி முனிவர்கள் இந்தகடைசிக் கட்ட நிலையைத் தேடுவதில்லை.

சித்தர்கள் என்று நாம் அறியும் மக்கள் வேறு விதம். இவர்கள் புலன்களால் உணரும் உலகத்தைக் கடந்து, பிரம்மனின் உலகத்தைத் தாண்டி. இன்னமும் பல இடைப்பட்ட சில கட்டங்களையும் தாண்டி, கடைசிகட்ட ஆண்டவனைத் தேடுவார்கள்.

இவர்கள் மக்களுக்கு இரண்டு வித அறிவைத் தருவார்கள். முதல் வகை – மனிதர்கள் அதிகமான தொல்லையில்லாமல் வாழும் வழிகள்..

அறிவில் தேர்ந்த எல்லா ஞானிகம் இந்த அறிவைப் வித விதமாகச் சொன்னார்கள். சிலர் பாட்டாகவும், வேறு சிலர் கவிதையாகவும் சொன்னார்கள். சிலர் கதைகளாகச் சொன்னார்கள்.

நாம் வேடிக்கையான மக்கள். நாம் எல்லோருமே நல்ல விஷயம் எதையுமே கண்டுகொள்ள மாட்டோம்.

தங்கள் வாழும் காலத்தை எப்படியெல்லாம் செலவிட வேண்டும் என்று விளக்கமாகச் சொல்லித்தந்தார்கள். என்னென்ன செய்ய வேண்டும், எதை எதைச் செய்யக் கூடாது என்றும் இந்த மகான்கள் சொன்னார்கள். எல்லவற்றையும் கேட்டுவிட்டு இதெல்லாம் நம் வேலைக்கு உதவாது என்று ஒதுக்கி விடுகிறோம்.

ஞானிகள் சொல்லித்தந்தது எதுவும் நமக்குப் பிடிக்காது.பிடித்துவிட்டாலோ நம்மை யாராலும் பிடிக்க முடியாத அளவு உயர்ந்து விடுவோம்.

உதாரணத்திற்கு சில:

உதாரணமாக, நமது உழைப்பை, அடைந்த செல்வத்தை நம்மை விட ஏழ்மையில் உள்ளவர்களுக்கு இலவசமாக தருவது அதிக மகிழ்ச்சி அடைவதற்க்கான ஒரு எளிய வழி.

நம் அரவணைப்பின், பொருள் பெரும் ஏழை எளிய மக்க ளுக்கு கிடைக்கும் மகிழ்ச்சி எப்படிப்பட்டது? மற்றவரின் மகிழ்ச்சியை நாம் காணும்போது, அந்த மகிழ்ச்சி நமது மனதில் பல மடங்காகப் பெருகி நாம் பெரு மகிழ்ச்சி அடைவோம் என்றார்கள், அறிவுடைய எல்லோருமே!

அதை சுருக்கமாக, அறம் செயவிரும்பு,

ஈவது விலக்கேல்,

ஐய்யம் இட்டு உண்,

இதில் எதுவுமே நமக்கு ஒத்துவராது. ஏனென்றால், நமக்கு பிறருக்குத் தருவதில் நம்மில் பலருக்கு மகிழ்ச்சி எதுவும் கிடைப்பதில்லை. யாராவது நமக்கு இலவசமாக தந்தால்தான் மகிழ்ச்சியே வரும்!

ஐய்யா, நமது இந்த விதமான தவறான அறிவு, ஓசிகளில் மனம் மகிழச் செய்கிறது. ஓசிகள் தருவதாக விளம்பரம் செய்து வியாபாரம் செய்பவர்களால் தினம்தோரும் மொட்டையடிக்கப் படும் மக்கள் இந்த ரகமான மக்களே!

திருக்குறளும், ஆத்திச்சூடியும், நாலடியாரும், கீதாச்சாரமும், ஹோலி பைபிளும், திருக்குரானும் காட்டிய வாழ்க்கைப் பாதை எல்லாமே ஒன்று தான். சொல்லிய இடமும், மொழியும் அதோடு தெரிவித்த விதத்திலும் தான் வேறுபாடு.

இன்று, அதிகமான வருமானம் உள்ளவர்கள் ௯௯% மக்கள் செலவழிக்கப் பயந்து ஏழைகள் எப்படி வாழ முடியுமோ அப்படி வாழ்கிறார்கள். கண்ணிருந்தும் குருடர்களைப் போல, காசிருந்தும் இவர்கள் ஏழைகள்.

இப்படிப் பட்ட மக்களுக்கு மற்றவருக்கு உதவும் மனம் இருப்பதில்லை. மற்றவருக்கு உதவும் மனம் மாத்திரம் நமக்கு கிடைத்து விட்டால் நாம் நம்மை பணக்காரர்களாக உணரலாம்.

பொருளாதார பாதுகாப்பை இல்லாமை, என்றொரு மனோீதியான, தொல்லை மனிதருக்கு உண்டு. பிறருக்கு அளிப்பதில் இன்பம் அடையும் மக்களுக்கு இந்த மனக்கோளாறு என்றும் நெருங்குவதில்லை.

நாம் நாமெல்லாம் நலமாக வாழ்வதற்கு ஞானிகள் சொன்னதில் ஒரு சில அறிவுறைகளையாவது முறையாகக் கடைபிடித்தாலே போதும். அவற்றை முழுவதும் கடைபிடித்தாலோ. நாமே ஞானிகளாகிடுவோம்.

வாழ்க்கைப் பாதை அல்லது மதங்கள் ஒன்று, இரண்டு இல்லை. ஆனால் சொல்லி வைத்தது போல, எல்லா மதத்திலும் இரண்டு அங்கங்கள் உண்டு.

ஒன்று கடவுள் நம்பிக்கை. இரண்டாவது வாழ்க்கைப்பாதை. கடவுள் நம்பிக்கையை ஒரு கைத்தடிக்கு ஒப்பிடலாம். இருட்டில், கைத்தடியின் உதவியோடு மோசமான ச ாலையிலே நடப்பதற்கு உதவும். (பாரதியார் சொன்ன கண் இருந்தும் குருடர்கள் தானே, நாமெல்லாம்?)

இரண்டாவதான வாழ்க்கைப் பாதை என்பது, வெளிச்சம் இல்லா விட்டாலும், தடுக்கி விழாமல் இருட்டில் நடப்பதற்கு உருவாக்கப்பட்ட சில உத்திகள்.

கடவுள் நம்பிக்கை என்கிற கைத்தடி இல்லாவிட்டாலும் பரவாயில்லை. சரியான, ஒரு வாழ்க்கைப் பாதையை உணர்ந்து, அதில்படி நடந்தாலே போதும். வெளிச்சமோ, கைத்தடியோ தேவை இல்லை. (இவர்கள்தான் நல்ல வாழ்வு வாழ்ந்திடும் நாத்திகர்கள்).

நாமெல்லாம் இரண்டும் கெட்டான் ரகம். அவ்வப்போது

கையிலே கைத்தடி, சில நேரங்களில் அரைகுறை விஞ்ஞான அறிவு. இதோடு தைரியமாக இருட்டில் ஆட்டம் போட்டபடி ஒரு ஓட்டம். என்றும் போலவே, விழுவதும் எழுவதும், நம் அனைவரையும் விடாது தொடரும்.

வெவ்வேறு அளவுகளில் கடவுள் நம்பிக்கை என்கிற கை த்தடியை மாத்திரமே பிடித்துக் கொண்டு விடுகிறோம். பரவாயில்லை. ஆனால். அதோடு இணைந்த, வாழ்வின் விதி–முறைகளையும் கடைபிடிப்பது மிகவும் அவசியமானது என்பது நமது, நல்ல மனதிற்குள் தோன்றுவதில்லை.

பலருக்கு நல்ல விஷயங்கள் என்றாலே கொஞ்சமும் பிடிக்காது. எனவே மதங்களின் முக்கியமான பாகமான வாழ்க்கைப் பாதையை ஓரங்கட்டி விடுகிறோம்.

சுருக்கமாகச் சொன்னால், மகான்கள் வகுத்த வாழ்க்கைப் பாதையிலிருந்து வெகுதூரம் விலகிவிடுகிறோம்.

பயணம் செய்யும் பாதையோ ஒரு கரடுமுரடான ஒன்று. அறியாமை என்கிற இருட்டினால் பாதையில் உள்ள குண்டு குழிகள் தெரிவதில்லை. அடிக்கடி, தடுக்கி விழுகிறோம். காயங்களும் வலிகளும் தொடர்வதை உணர்கிறோம். விழுவதும் எழுவதும், மனக்காயங்களுமே வாழ்க்கை என்ற முடிவுக்கு வருகிறோம்.

## இரண்டாவது, அறிவு என்கிற விளக்கு.

இது கடினமான வழி. ஞானிகளின் வழியில் நடக்கத் துவங்கி ஒரு கட்டத்தில் நாமே ஞானிகளாவது. அப்படி, அறிவு என்கிற விளக்கை அடைவது.

இது அவ்வளவு சுலபமான விஷயம் இல்லை! சிலருக்கு எப்படி சுலபமாயிற்று?

அந்த சிலர், நம்பிக்கை என்ற கைத்தடியுடன் வாழ்க்கையைத்

துவங்கி, மதங்கள் வகுத்துத் தந்த வழியிலே சிறிதும் வழி தவறாமல், கவனமாக வாழ்ந்தவர்கள். கைத்தடி இல்லாமல் நடந்தவர்களும் இதில் அடக்கம்.

இவர்கள், அறிவு என்கிற விளக்கை அடைவதில் வாழ்க்கையின் குறிக்கோளாக கொண்டவர்களாக இருப்ப்பதில்லை. பெரும்பாலும் எதையோ தேடிப் போனவர்களுக்கு கடைசியாகக் கிடைத்தது உயர்ந்த அறிவு. அப்படிப்பட்ட அறிவை அடைந்து, மக்கள் மத்தியிலே மகான்களாக அறிப்பட்டு எந்த ஒரு செப்பனிடப்படாத பாதையிலும் காயங்கள் இல்லாமல் பயணம் செய்யக்கூடியவர்கள்.

அதோடு, நம்மைப்போல மக்களின் மேல் அனுதாபம் கொண்டு, துக்கங்களை துடைத்து, வலிகளை நீக்கி, நமது பயணங்களைச் சுலபமாக அமைய உதவுகிறார்கள். இதை ஆன்மிகமாக அறிகிறோம்.

அறிவு என்கிற ஒளி இருக்கும்போது கரடு முரடான பாதைகளில் பயம் இல்லாமல், காயமில்லாமல் செல்வது இயலும். நம்பிக்கை என்கிற கைத்தடியின் அவசியம் இல்லை. உண்மைதானே!

இந்த புத்தகத்தில் இதுவரை பலர் சொல்லி, சிலர் எழுதி நாம் அறிந்த சிலவற்றை திரும்ப ஒருமுறை சொல்லுவோம். அதில் நாம் நம்பிய விஷயங்களும் சில சமயம் நம்பமுடியாத விஷயங்களும் அடக்கம்.

ஞானிகளையும் விஞ்ஞானிகள் சொல்வதையும் நாம் நம்பலாம். பல்வேறு காலகட்டத்தில் உலகெங்கிலும் தோன்றிய இந்த தாங்கள் உணர்ந்ததைச் சொல்கிறார்கள். ஒரு சிலர் உணர்ந்ததில் சில சமயங்களில் குறைவு வரலாம். ஒரேயடியாக இவர்களில் எவருக்கும் பொய்கள் சொல்லக் காரணம் ஏதும் இல்லை.

ஞானிகள் உலகின் பல பாகங்களில் சித்தர்கள், மகான்கள்,

முனிவர்கள், சுபி ஞானிகள், புத்தபிக்குகள், என்று பல பெயர்களில் அறியப்படுகிறார்கள்.

இவர்கள் அறிந்து சொன்ன அறிவிலே முழுகி, நாம் இதுவரை அறிந்த உலகத்தையும், நமது அண்டத்தையும் சித்தர்கள் சித்தரித்ததுபோலவும், மெய் ஞானிகள் கண்டது போலவும் காண்பதற்கு முயற்சி செய்வோம்.

அறிவுப்பாதையிலே நடந்திடுவோம்.

நம்மைப் படைத்த பிரம்மாவைக் கண்டு கைகுலுக்குவோம்.

நடராஜன் நாகரெத்தினம்

natarajan.naga@gmail.com

பங்களூரு

# அத்தியாயம் 01

## ஞானிகள் சொன்னது என்ன?

*வாழும் காலத்தில், நமக்கு ஏற்படக்கூடிய எல்லா துன்பத்திற்கும் காரணம், அறிவு இல்லாததே.*

### சில உண்மைகள்:

முதல் உண்மை: நமக்கும், நாம் அறிந்த பல நாலுகால் உயிர் வகைகளுக்கும், வேறுபாடுகள் எதுவுமே சொல்லும் படியாக இல்லை என்பது முதல் உண்மை. அதை, நம் தன்மானம் ஒப்புக்கொள்ளாத காரணத்தால், போகட்டும் என்று ஒதுக்கிவிடுவோம்.

அடுத்த உண்மை: உதாரணமாக, ஒரு தொழில் நடத்தி, பணக்காரராக வளர, உழைப்பு, தொழில் அறிவு இரண்டும் அவசியம்தான். ஆனாலும், அதோடு சிறிதளவாவது பணம், முதலீடாக வேண்டும் இல்லையா? அது போல அதிக அறிவை நாம் பெறுவதற்கு, சிறிதளவாவது, பண முதலீடு போல, அறிவு அவசியம்.

எந்த ஒரு நாட்டு மக்களை, எந்த ஒரு காலத்திலும் அதில் ஒரு உண்மை தெளிவாகும். ஒரு லட்சம் (க௦௦,௦௦௦) மனிதர்களை எடுத்துக்கொண்டால், கூகூ,கூ௦௦ மக்களுக்கு அந்த அறிவு என்கிற ஐட்டம் கிட்டத்தட்ட கிடையாது என்று தீர்மானமாகச் சொல்லலாம். இரண்டு கால் மிருகங்களைப் போல இயந்திரமாகப் பிறந்து, மேலும் தன்னைப் போல சில இயந்திரங்களை உருவாக்கி, இயந்திரமாக வாழ்ந்து பழுதடைந்து மடிவார்கள். பிரம்மனுக்கு பிரச்சனை தராதவர்கள்.

## நல்லறிவு கொண்ட மக்கள்.

மீதம் இருக்கும் இந்த கoo மனிதரில் ஒருவர் ஞானி, இரண்டு விஞ்ஞானி. மேலும் உஎ மனிதர்கள் இநத ரக மனிதர்கள். அவர்களில் ஒரு சிலர் நல்ல குருமார்கள் வேறு சிலர் நல்ல ஆசிரியர்கள், நேர்மையான அலுவலர்கள் மற்றும் அதிகாரிகள். இவர்களுக்கு நல்ல அறிவுண்டு. மற்றவரோடு ஒத்து செயல்பட இயலாதவர்கள். சொத்துக் குவிக்கும் ஆசையில்லாதவர்கள். இவர்களால் அறிவில்லாத பலருக்கு தொல்லையில்லாவிட்டலும், பெரியதாக உதவி ஒன்றும் கிடைத்துவிடாது.

## அறிபடைத்த தீயவர்கள்

மீதம் எo மக்களில்ம் வழி தவறிய அரசியல் பிரமுகர்கள், பேராசை கொண்ட வியாபாரிகள், தன்னலம் கொண்ட தொழில் அதிபர்கள். சொல்லும்படியாக ஒரு காரணமும் இல்லாத (இடைத்தரகர்கள்) செல்வந்தர்கள்.

இவர்கள் அறிவில்லாதவர்களை சுரண்டுவதும், சுரண்டிய பணத்தை நாடு கடத்துவதும் கடைசியாக மூச்சு விடும்வரை இடைவிடாது செய்யும் தொழில்கள். இவர்களின் வெற்றிக்கு முக்கய காரணம், மற்ற தீயவர்களுடன் இணைந்து செயல்படும் தன்மை.

இவர்கள் பிரமனுக்கு மிகவும் வேண்டியவர்களோ என்று எண்ண இடமுள்ளது. திகைப்பாக இருக்கிறதா? இதை பிறகு ஆராய்வோம். இவர்களுக்கு அறிவுண்டு, ஆனால் அது நல்லறிவில்லை.

## அறிவில்லாத பிறவிகள்.

இந்த பெரும்பான்மை மக்கள் இருக்கிறார்களே – அதாவது,

கூக,கூ௦௦ நபர்கள் = இவர்களுக்கு தானாகவே எதுவும் தெரிந்து கொள்ளும் சக்தி கிடையாது என்பது மட்டுமில்லை. வேறு ஒருவர் விளக்கமாக எடுத்துச் சொன்னாலும் புரிந்து கொள்ளும் சக்தியும் இவர்களுக்கு கிடையாது என்பதை நிச்சயமாக நம்பலாம்.

இவர்களை தீவட்டி தடியர்கள் என்று பலர் விமரிசனம் செய்தாலும் அறிவென்ற தீ, அதாவது அறிவுத்தீ தரும் ஒளி இவர்கள் வாழ்வில் துணை வருவதில்லை.

பிள்ளைப் பேறு என்ற பெயரில் கணக்கில்லாமல் பெற்றுத்தள்ளுவார்கள். அடிமையாக வாழ சிறிதும் அஞ்சு வதில்லை. பசிக்கும் வலிக்கும் பயந்து எந்த ஒரு ஆபத்தான வேலையையும் துணிந்து செய்வார்கள்.

இவர்கள் வாழ்க்கை புலன்களின் எல்லைகளுக்குள் அடைந்திருக்கும்.

இவர்கள் வாழ்வு பல விதமான நம்பிக்கைகளைச் சார்ந்தே இருக்கும். எந்த நம்பிக்கை வாழ்வின் ஆதாரமாகிறதோ அதே நம்பிக்கை இவர்களின் அழிவிற்கும் காரணமாகிறது. இவர்கள் நம்புவதில் சில: கடவுள், ஜாதித் தலைவர்கள், அரசியல் தலைவர்கள், வழி வழி வந்த மூடநம்பிக்கைகள்.

### மூன்றாவது உண்மை:

மேலோட்டமாக பார்த்தால், மேலே கண்ட இரண்டு உண்மைகளால் – அறிவில் குறைவு காரணமாக – அவரவர்கள் வாழும் காலத்தில் ஒவ்வொருவருக்கும் டன் அளவில் துயரங்கள் உண்டு.

அதன் பின் விளைவாக, மனதில் மற்றும் உடல்களில் தோன்றும் காயங்கள் குறைவில்லாமல் என்றுமே உண்டு.

நமது வாழும் சூழ்நிலைகளோ, கல்விக் கூடங்களோ

அறிவை அடையச் செய்வதில்லை. பள்ளிக்கூடங்களில் மற்றும், கல்லூரிகளில் படித்து பல பட்டங்கள் பெற்றவர்கள் கூட அடையும் காயங்களில் குறைவில்லையே, எதனால்? இந்தக் கல்விக் கூடங்கள், அறிவை அடைய வழிசொல்லுவதில்லை.

*உயிர்களின் அறிவை அடைய முடியாமல் இருப்பதற்கும் ஆண்டவனுக்கும் ஏதோ ஒரு பெரும் பங்கு இருப்பதை ஒரு மாதியாகக் காணலாம்.*

உயிர்கள் அறிவை அடைவது குறித்து எந்த அறிவு படைத்த தீயவர்களுக்கும் மற்றும் கடவுளுக்கும் உடன்பாடு இல்லை போலிருக்கு.

மக்களுக்கு அறிவு கிடைத்தால் ஆண்டவருக்கும் ஆள்பவருக்கும் மரியாதை போய்விடும். இதனால் தானோ என்னவோ இந்த இருவருக்கும் மனிதர்கள் அறிவை அடைவது பிடிக்காது.

அறிவை அடைந்த எவரையும் ஏமாற்றி ஆளமுடியாது, இல்லையா. ? ஆள்பவர் மக்களுக்கு அறிவை அடையாமல் செய்யும் வழி, பயன் தராத பாடத்திட்டங்கள், முறை இல்லாத ஆசிரியர் நியமனங்கள், லஞ்சத்திலே ஊறிய கண் காணிப்புக் குழுக்கள் என்று அடுக்கிக்கொண்டே போகலாம்.

ஆனால், ஆண்டவன் செய்யும் சூழ்ச்சி என்னவோ? காத்திருங்கள், கண்டுபிடிப்போம். அதுமட்டுமில்லை, நமது ஆராய்ச்சியில் கண்டுபிடிக்கப்போவது:

உயிர்களுக்கு:

கேள்வி: இந்தக் காயங்கள் ஏற்படுவது எதனால்?

பதில்: ஓட்டங்களால்.

கேள்வி: மனிதருக்கு (உயிர்களுக்கு)த் தோன்றிய

காயங்கள் பிரம்மனை எப்படி பாதிக்கிறது?

பதில் : அடுத்து வரும் பக்கங்கள் பதில் சொல்லும்.

கேள்வி: ஞானிகள் காயங்களுக்கு எப்படி மருந்து இடுகிறார்கள்?

பதில்: இதையும் விளக்கமாகப் படிக்கலாம்.

மகான்கள் தோன்றியவாறு இருக்கிறார்கள்

எல்லாக் காலங்களிலும், உலகின் பல பாகங்களில், உங்களைப் போன்ற, என்னைப் போன்ற சாதாரண மக்கள் மத்தியிலே ஒன்று இரண்டு மகான்கள் அவ்வப்போது தோன்றிக்கொண்டே இருக்கிறார்களே?

ஏன்? புத்தர், இயேசுநாதர். தீர்கதரசியார் – ஆகிய மூவர் போதாதா? இவர்கள் காட்டாத வழியா?

மதங்கள் வகுத்த பழய வழிகள் (காண்டிராக்ட்டர்கள் போட்ட ஹைவே ரோடு போலவே) காலப்போக்கில் சேதம் அடைகிறது, மகான்கள் மிகவும் மனிதநேயம் மிக்கவர்கள். இவர்களால் நம்மைப்போல அறிவில் குறைவுள்ள மக்கள் அவதிப்படுவதைக் காணச் சகிக்க முடியாமல் தவிப்பவர்கள். சேதமடைந்த பாதைகளைச் செப்பனிடுவதும் புதிய வழிகளைத் தோற்றுவிப்பதுமாக வாழ்கிறார்கள்.

மதங்கள் என்கிற வாழ்க்கைப் பாதை:

இதிலே, உயிர்கள் ஆசைப்படும் எல்லாவற்றையுமே தரும் கடவுள்கள் உண்டு.

நாம் செய்யும் தவறுகளுக்குத் தண்டிக்கும் தெய்வங்கள் உண்டு,

ஆராதனைகள் உண்டு.

கடவுளின் அன்பை, மனிதனுக்கு உணர்த்த உதவும் கதைகளும் கணக்கில்லாமல் உண்டு.

இவர்கள் உருவாக்கிய இதிகாசங்களும் புராணங்களும் மனிதனுக்கு இறைவன் மீது நம்பிக்கையை ஊட்டும். பற்றுதலையும் உண்டாக்கும். வழிபாடுகள், பண்டிகைகள் கொண்டாட்டங்கள் என்று வகை வகையாக எல்லாமே உண்டு.

நாமெல்லாம் நலமாக வாழ இவைகளில் பாதியையாவது (அதுவும் அதிகம் என்றால், ஆயிரத்தில் ஒரு பங்கையாவது) முறையாகக் கடை பிடித்தாலே போதும். பூமியிலேயே ஒரு சுவர்கம் உருவாகிடும். முழுவதும் கடைபிடித்தால் நாமும் ஞானிகளாகிடுவோம். ஆனால், அப்படிப்பட்ட ஒரு சூழ்னிலை என்றும் வராது. இது உறுதி. இது பிரம்மனுக்கு ஒத்துவராது.

ஞானிகள், தங்களால் முடிந்த அளவு உதாரணங்கள் மூலம் வாழ்க்கையின் தன்மையை விவரித்தார்கள். அதைப் புரிந்து கொண்டால் மனிதனுக்குத் துன்பமே வராது. ஆனால் புரிந்து கொண்ட மனிதரெல்லாம் ஞானியாகி விடுவார்கள். எல்லா மக்களும் புரிந்து கொண்டால், இந்த அண்டமே அழிந்துவிடலாம்.

## மனிதனுக்கு காயங்கள் உண்டாகாமல் இருக்க ஞானிகள் தெரிவித்த:

மதங்கள் வகுத்த வழியில் மனிதர்கள் செல்லாததால், மகான்கள் சில உண்மைகளை மனிதர்கள் முன்னால் வைத்தார்கள். இதை முழுமையாக உள் மனதில் ஏற்றிவிட்ட அனைவரும் ஞானியாகும் அபாயம் முண்டு. ஆனால் பலர் தலைகள் இவற்றை ஏற்க்காது.அதில் முக்கியமான சில.

### (க) அகங்காரமும் – மமகாரமும்:

இரண்டு காரசாரமான சமாச்சாரங்கள். வாழும் உயிர்கள் எல்லாவற்றுக்கே ஆதாரம் ஒரு கூட்டணி. இரண்டு பாகம் கொண்ட ஒரு கூட்டணி. ஒன்று புலன்களில் உணர முடியாத சூக்கும உயிர், மற்றது புலன்கலில் சிக்கும் பரு உடல். ஒரு கூட்டணி வைத்திருப்பது என்றுமே, எங்குமே ஒரு தாற்காலிக ஏற்பாடு. (அரசியலில், ஒரு தேர்தலின் போது உண்டாகும் கூட்டணி கூட, அடுத்த தேர்தல் வரை நீடிக்குமா என்பது தீர்மானமாக சொல்ல முடியாது இல்லையா?)

அதே போலத் தான் இந்த உயிர்–உடல் கூட்டணியின் தன்மையும். உயிரானது, தான் கொண்ட பரு–உடலையும் சே ர்த்து, தான் என்று நினைக்ககூடாது. அப்படிப்பட்ட தவறான எண்ணத்தை ஞானிகள் அகங்கார் – அகங்காரம் என்கிறார்கள். (அகங்காரம் என்ற ஒரு சொல்லை – திமிர் என்ற பொருள்பட நாம் தவறாக உபயோகிக்கிறோம்).

ஞானிகளின் கண்டுபிடிப்பில், உயிர் என்னும் கூட்டணியின் ஒரு அங்கம். அழிவற்றது. ஆனால் அதன் கூட்டாளியான பரு உடலோ அழியும் தன்மை உள்ளது. ஆகவே, ஞானிகள் மனிதனுக்கு அறிவுருத்தியது – மனிதா, உன் உடலுக்கு வரும் தீங்குகளை உனக்கு வந்ததாக நினைக்காதே!

நான் அடுத்து சொல்லப்போவதைப் படித்துவிட்டு, எனக்கு மனக்கோளாறு என்று தீர்மானித்தால்நான் அதிர்சி அடையமாட்டேன்.

கடல் அலைகளும் முயிருள்ளவையே. கடல் அலைகளைக் கவனியுங்கள். அலைகள் மற்ற உயிர்களைப் போலவே பிறந்து, வளர்ந்து, சிறிய அலைகளத் தோற்றுவித்து, ஆற்றல் குறைந்து பிறந்த கடலிலேயே மறைந்து விடுகிறது.

அலைகளின் ஆற்றல்தான் (பூமி, சந்திரன் இரண்டின் இடயில் தோன்றும் ஒரு ஈர்ப்புச் சக்தி) அலைகளின் உயிராகிறது. அலைகளின் உடலோ, கடல் நீர்.

அய்யா, உடலின் எந்த பாகத்திலும் வலி வந்தால் இந்த தத்துவங்கள் எடுபடுமா என்று நீங்கள் கேட்கலாம். போகட்டும். வலிகள் கூடிய உடலைச் சகித்துக்கொள்ள அதிக மனப்பக்குவம் தேவை. அதை ஒதுக்கி வைத்துவிட்டு, மனதை மட்டுமே பாதிக்கும் சமாச்சாரங்களப் பார்க்கலாம்.

நம்மை சிலர் கேலி செய்கிறார்கள். மனதில் வேதனை தோன்றும். என்றாலும், ஒதுக்கி விடலாம்.

நம் மீது சேற்றை பூசுகிறார்கள் அல்லது அசிங்கத்தை வீசுகிறார்கள். பரவாயில்லை, மீண்டும் ஒரு முறை குளித்துவிட்டு, நமது வழியே செல்லலாம்.

நம்மை, அறிவில்லாதவன், முட்டாள் என்றெல்லாம் ஏசு கிறார்கள். ஏதோ தமது அபிப்பிராயத்தை சொல்கிறார்கள். அது பெரும்பாலும் உண்மையாகக் கூட இருக்க வாய்ப்புகள் உண்டு என்று மனதை சமாதானம் செய்து கொள்ளலாம்.

நமது சொந்தங்களை, நம் தொழிலை, நமது நம்பிக்கை களை, ஏன், நாம் வணங்கும் கடவுளையும் அவமரியாதை செய்தாலும், நமது மனதை பாதிக்கக் கூடாது.

வேறு வழியில் சிந்தித்தால், நமது உடலை, உயிர் அணிந்திருக்கும் முதல் சட்டையாக உருவகம் செய்து கொண்டாலோ ! பல பிரச்சனைகள் நம்மை வாட்டாது.

சட்டையில் அசிங்கம் சேர்ந்தால், துவைத்து சுத்தம் செய்த பிறகு அணியலாம். கிழிந்தாலோ, தைத்து சரி செய்து அணியலாம். அதிக கேடு வந்தால், புதியது அணியலாம். ஆனால் சட்டைக்காக மனதை வருத்து அதன் பின் விளைவாக உடலையும் வறுத்தலாமா?

கிழிந்த சட்டையும், இழி சொல்லும் மனதைப் பாதித்தால் வீணான கோபம் தோன்றும். அதனால் தேவை இல்லாத தீய பின் விளைவுகள் எல்லாமே தொடரும். இதெல்லாம்

அவசியம்தானா?

அடுத்தது நாம் அலசப் போவது, ஞானிகள் தெரிவித்த, மமகாரம்:

**மமகாரம்: இரண்டாவது காரமான சமாச்சாரம்!**

எதுவுமே நம்முடையது இல்லை !

இது, கேட்கவே ஒரு சிக்கலான விவகாரம். ஞானிகளின் இந்தக் கணிப்பின் படி உலகில் சொந்தம் பந்தம் எல்லாமே மாயா கிளப்பிய ஒரு புரளி. வேறுவிதமாகச் சொன்னால் நமது மண்டையிலே மாயா புகுத்திய மெகா பொய்கள்.

நாம் மற்றவரைச் சார்ந்து மாத்திரமே வாழப் பழகியிருந்தால், இந்த செய்தி அதிர்ச்சி தரும். உண்மை என்னவென்றால், மமகாரம் என்பது நமக்கு அதிகமான துன்பம் தரும் விவகாரம்.

எனது தாய், எனது தந்தை, எனது நண்பர்கள், எனது வீடு, எனது பள்ளிக்கூடம். எனது நாடு, எனது ............ !

கீதாசாரம் சொல்வதைப் போல, அய்யா, பிறக்கும் போது நாம் நம்முடன் கொண்டு வந்ததுதான் என்ன? உடன் வந்தவர்கள்தான் யார் யார்? இறந்த பின் நம்முடன் வருவதென்ன?

உயிரானது தனது பரு உடலை விட்டு நீங்கிய மறு நிமிடமே – அதை பிணம் என்கிறோம்! அதன் பிறகு, இறந்தவரை யாருமே, பெயரையோ அல்லது உறவு முறைகளையோ வைத்துக் குறிப்பிடுவதில்லை. உடலை படுக்கை அறைக்கு கொண்டு செல்வதில்லை. அதற்கு ஒரு மரியாதையாக ஒரு ஆங்கிலப் பெயர் பாடி – (ஆணிஞீதூ) உண்மைதானே!

நம் உடலே நம்முடையது இல்லை என்ற உண்மையை மறந்து உலகிலே, வாழும் காலத்திலே, எதை எதையோ எனது என்று எண்ணி எண்ணி, எண்ணிக்கை இல்லாத துன்பங்களில்

சிக்குகிறோம்.

## நான் யார்?

நாமெல்லாம் ஒரு பயணிகள்.

நம்மை இந்த உலகில் ஒரு பயணியாக மாத்திரமே உணருங்கள். பயணிகள் நிரந்தரமாகத் தங்குவதற்காக இந்த உலகிலே நுழையவில்லை. பயணம் செய்பவர்கள் வந்த இடத்திலெல்லாம் வங்கிக் கணக்கு தொடங்குவதில்லை, சொத்துகளும் வாங்கி குவிப்பதில்லை! (ஜென் கதைகளில், நாம், இந்த உலகத்தில் பயணிகள் என்ற கருத்தை வலியுருத்தும் கதைகள் உண்டு)

வாழ்வில் காணும் உயிர்—உடல்கள் எல்லாவற்றையுமே (உற்றார், உறவினர், சுற்றம், நண்பர்கள், வளர்ப்புப் பிராணிகள் எல்லாவற்றையுமே) சக பயணிகளாகக் காணுங்கள். அவரவர் தங்களுக்கு விதிக்கப்பட்ட (உண்மையில் அவரவர் தேர்ந்தெடுத்த) பயணத்தைத் தொடர்கிறார்கள்.

அவர்கள் ஒவ்வொருவர் பயணமும், நமது பயணத்துடன் தாற்காலிகமாக இணைகிறது — சக ரயில் பயணிகளைப் போல. அவரவர் இறங்கும் ரயில் நிலையம், அல்லது ஊர் வந்ததும் பிரிகிறார்கள். அவ்வளவுதான். இதை மனதில் உணர்ந்தால், மனிதரின் மீதப் பிரச்சனைகள் காணாமலே போய்விடும்.

இந்த புத்தகத்திலே, மனித வாழ்க்கையை ஒரு ஓட்டமாக வாசகர்களை நினைத்துப் பார்க்கச் சொல்கிறேன். அதில் வெற்றி கண்டால், பிரமனைக் காண்பது எளிதாகும்.

# அத்தியாயம் 2

## வாழும் வழிகளை இரண்டாகப் பிரிக்கலாம்.

### ஆத்திகமும், ஆன்மிகமும்.

### வாழ்க்கை என்னும் பயணம் :

பல ஞானிகள் மனிதனின் இயக்கத்தைப் பயணமாகவும், இந்த உலகத்தில் நாம் வாழும் வகையை வாழ்க்கையைப் பாதை என்றும் உவமானமாகச் சொன்னார்கள்.

மேலும் உயிர்கள் எல்லாம், ஒரு முடிவில்லாத, பயணத்தில் உள்ளன. இந்த பயணத்தில் இடைவெளி உண்டு. அந்த இடை வெளியில், நாம் உடைகளை மாற்றிக் கொள்வதைப் போல உயிர்கள் தன்னுடன் கூட்டணி சேரும் உடலை மாற்றிக் கொள்வதாக ஞானிகள் சொல்கிறார்கள்.

ஒவ்வொரு இடைவெளியையும் நாம் மரணம் என்று அறிகிறோம். இஸ்லாம் மதப்பாதையில் இந்த மரணத்தை ஒரு நீண்ட உறக்கமாகவே (உறக்கத்தின் அக்கா என்று) கருதுவதாக அறிகிறோம்.

### பயணிகளும் வழிகாட்டிகளும்:

உயிருடன் கூட்டணி சேர்ந்து இயங்கும் பலவிதமான உடல்களில் ஒன்று தான் மனிதர்கள்.

மனிதர்களை, பயணிகள் என்றும் வழிகாட்டிகள் என்றும் இரண்டாகப் பிரிக்கலாம். அறிவில் குறைந்த நாமெல்லாம் பயணிகள் என்றால், நாம் அறிந்த மகான்கள் எல்லோருமே வழி காட்டிகள்.

சுருக்கமாகச் சொன்னால், நமது பயணம் செய்யும் பாதை கரடு முரடான ஒன்று. அது இருட்டான ஒரு பாதையும் ஆகும். இந்த இருட்டான, கரடு முரடான வாழ்க்கைப்

பாதையில் பயணம் செய்யும் போது விழுவதும், காயங்கள் அடைவதும் தப்பாது.

பயணமோ நில்லாது நடக்கவேண்டும். நடக்கையிலே காயங்கள் தோன்றுகின்றன. காயங்கள் பயணத்திற்கு தடையாகிறது. என்ன செய்யலாம்?

வழிகாட்டிகளான மகான்கள், மக்கள் காயங்களால் துன்பம் அடையாமல் செய்ய – அதாவது, நலமாக வாழ, இரண்டு உபாயங்களைத் தெரிவித்தார்கள்.

முதலாவதாக ஆத்திகம், அடுத்தது ஆன்மிகம்

முதலாவது ஆத்திகம்: ஆஸ்த்தா என்ற வடமொழிச் சொல்லில் இருந்து மருவிய சொல். ஆஸ்தா என்றால் நம்பிக்கை. இதை ஒரு உவமானத்தால் விளக்கலாம்.

ஆத்திகம், (இருட்டில் கரடுமுரடான பாதையில் செல்ல கைத்தடி எப்படி உதவுகிறதோ, அதே போல உதவும் ஒரு உபாயம்.) கடவுள் என்ற ஒரு கண்ணில் புலப்படாத ஒரு பேருயிருடன் அன்பு கொள்வது. அந்த பேருயிரின் வசம் தங்கள் கவனத்தை முழுவதுமாக திருப்பிவிடுவது. அல்லது அந்த கடவுளின் நட்பை அடைய முயற்சி செய்வது.

வேறுவிதமாகச் சென்னால் கடவுளைக் காக்காய் பிடித்து, அவருடைய அருளை அடைந்து, பயன் பெறுவது. இந்த வகை வாழ்க்கை கண் பார்வை இழந்தோரின் உதவிக்கு வைத்திருக்கும் கைத்தடி போன்றது. இந்தக் கைத்தடி முதல் பாகம்.

ஆத்திகத்தில், முக்கியமான இரண்டாவது பாகம் (ஒரு வரை படம் –ஆஅக). வாழும் காலத்தில் என்ன செய்யலாம், என்ன செய்யக்கூடாது என்ற வழிமுறைகள். இவையே மகன்கள் வகுத்த வாழ்க்கைப்பாதை.

பொய் பேசக்கூடாது. பொறாமை, பேராசை இல்லாமல் வாழ வேண்டும். பிறரை ஏமாற்றக்கூடாது, எளியவர்களுக்கு உதவவேண்டும். தீமை செய்வோருக்கும் நன்மை செய்ய வேண்டும் என்ற ஒரு பட்டியல் இந்தப் பாதையிலே காணப்படும்.

இதைக் கடைபிடித்தால் போதும். கைத்தடி (கடவும் நம்பிக்கை, ஆராதனைகள் என்று எதுவும் தேவை) இல்லாமலும், கரடு முரடான வாழ்க்கைப் பாதையில் அதிக அளவு காயம் அடையாமல் பயணம் செய்ய முடியும். விழுவதும் வலிகளும் அதிகம் இல்லை !

நம்மில் பலருக்கு இந்த வலி குறைந்த பாதைகள் ஒத்துவராது. ஏன்? காரணம் இல்லாமல் இல்லை. உதாரணமாக:

க. அறம் செய விரும்பு. – என்ற ஒரு ஞானியின் அறிவுரை. (பிறருக்குக் கொடுப்பதில் நமக்கு விருப்பம் இல்லை).

உ. ஐயமிட்டு உண். (ஒத்துவராது)

ங, ஈவது விலக்கேல். (நமது பொருளை, செல்வத்தை, உழைப்பை பிறருக்குக் கொடுக்கப் பிடிக்காது. நமக்கு என்றுமே வாங்கத்தான் பிடிக்கும்.)

ச. ஆறுவது சினம். – என்னால் கோபத்தை கட்டுப்படுத்த முடியாது.

ஓட்டுமோத்தமாக எந்த ஒரு நல்ல அறிவுறையும் நமக்குப் பிடிக்காது.

எனவே, மதங்கள் காட்டிய வழிகள், பாதைகள் பெரும்பாலான மக்களுக்கு பயன் படுவதில்லை. ஆகவே நம்பிக்கை என்ற கைத்தடியை மட்டுமே பற்றிக் கொண்டு, மகான்கள் வகுத்த பாதையைவிட்டு வெகுதூரம் விலகி, கரடுமுரடான பாதையிலே செல்கிறார்கள்.

அப்படி இருந்தபோதும், பொதுவாக, நம்பிக்கை என்கிற கைத்தடியுடன் உதவியுடனே மாத்திரம் வாழும்போது காயங்களும் வலிகளும் சற்று குறைவாகவே இருப்பதை உணர்கிறோம்.

கைத்தடி இல்லாமலும் காயம் சிறிதும் வராமலும் பயணம் செய்ய வேறு ஒரு வித்தியாசமான வழி உண்டு. அது அறிவு என்னும் விளக்கைப் பிடித்தபடி பயணம் செய்வதுதான். அது தான் ஆன்மிகம்.

## அறிவு என்கிற விளக்கு.

இதைப் பற்றி முந்தைய அத்தியாயத்தில் கண்டோம்.

இந்த புத்தகத்தில் இதுவரை பலர் சொல்லி, சிலர் எழுதி நாம் அறிந்த சிலவற்றை திரும்ப ஒருமுறை சொல்லுவோம். அதில் நாம் நம்பிய விஷயங்களும் சில சமயம் நம்பமுடியாத விஷயங்களும் அடக்கம்.

ஞானிகள் மற்றும் விஞ்ஞானிகள் சொல்வதை நாம் நம்பலாம். பல்வேறு காலகட்டத்தில் உலகெங்கிலும் தோன்றிய இந்த வகை மனிதர்கள் தாங்கள் உணர்ந்ததைச் சொல்கிறார்கள். ஒரு சிலர் உணர்ந்ததில் சில சமயங்களில் குறைவு வரலாம். ஒரேயடியாக இவர்களில் எவருக்கும் பொய்களைச் சொல்லக் காரணம் ஏதும் இல்லை.

ஞானிகள், உலகின் பல பாகங்களில் சித்தர்கள், செயிண்ட்கள், மகான்கள், முனிவர்கள், சுபி ஞானிகள், புத்தபிக்குகள், சாது க்கள் என்று பல பெயர்களில் அறியப்படுகிறார்கள்.

இவர்கள் அறிந்து சொன்ன அறிவிலே முழுகி, நாம் இதுவரை அந்த உலகத்தை, அண்டத்தை சித்தர்கள் சித்தரித்தது போல மெய் ஞானிகள் உணர்ந்தது போல, நாமும் காண்பதற்கு முயற்சி செய்வோம். வேறுவிதமாகச் சொன்னால், அறிவுப் பாதையிலே நடந்திடுவோம்.

நீண்ட பயணம் செய்யும்போது நம்மைப் படைத்த பிரம்மாவைக் கண்டு, அவருடன் நாம் கைகுலுக்குவோம்.

# அத்தியாயம் 3

## ஆத்மாமும் ஆன்மிகமும்



### ஆன்மா, உயிர்கள், ஓட்டங்கள்

ஆன்மா என்று நாம் சொல்வதை உலகின் பல பாகங்களில் வெவ்வேறு பெயர்களால் அறிகிறார்கள். உயிர், ரூ, ஸ்பிரிட் ஸோல்.

மின்சாரம், காற்று, வாசனை, காந்தம், புவி ஈர்ப்பு ஆகியவற்றைக் காணமுடியாது. ஆனால் ஏதாவது ஒரு புலன் மூலம் நேரடியாகவோ மறைமுகமாகவோ ஒரு மாதிரியாக உணரலாம்.

இந்த ஆன்மா இருக்கிறதே, நமது அனைத்து புலன்களுக்கும்

அப்பாற்பட்டது. அதனால் ஆன்மா ஒன்று இல்லை என்று முடிவு செய்துவிட்டால், வாசகப் பெருமக்களே, தயவு செய்து இந்த புத்தகத்தை மூடி வைத்துவிட்டு வேறு வேலை இருந்தால் செய்யுங்கள்.

இந்த ஆத்மாவை ஒரு மாதிரியாகப் புரிந்து கொள்ளாமல் பிரம்மனைக் காண முடியாது. முதன் முதலாக அதை படித்து உணர்ந்து, உடல்களை ஆராய்ந்து, உயிருக்கு ஆதாரமான ஓட்டங்களை அறிவது அடுத்த கட்டம்.

## ஆன்மிகம் = புலன்களில் சிக்காதவற்றை தேடுவது.

புலன்களில் சிக்காத ஆன்மாவை அறிவதே ஆன்மிகம் என்று சொல்லலாம்.

தினசரி வாழ்கையில், வீட்டிலோ அல்லது ஆபீஸிலோ, அவரமாக ஒரு பொருளையோ அல்லது காகிதத்தையோ தேடாத நாள் இல்லை என்பது உண்மைதானே! அப்படி நாம் தேடும் பொழுது, முன்பு ஒருநாள் தேடியும் கிடைக்காத சில பொருட்களும் அன்று கிடைக்கும். உண்மைதானே!

## ஆன்மிகத்திற்கு ஒரு புதிய விளக்கம்.

அதேபோல தேடுதலில் ஈடுபட்டிருக்கும் எல்லா ஞானிகளுக்கும், ஆன்மாவைத் தேடும் போது, ஆன்மா மட்டுமின்றி, புலன்களில் சிக்காத பல வேறு அறிவையும் அடைவார்கள். எனவே புலன்களில் சிக்காத அனைத்து அறிவையும் ஆன்மிகதோடு இணைத்தால் அது தப்பில்லை.

விஞ்ஞானிகளுக்கும் தங்கள் தேடலில்போது, என்றுமே தாங்கள் தேடாத பல அனுபவங்களைப் பெறுகிறார்கள். ஒரு கட்டத்தில் ஞானிகளுக்கும் விஞ்ஞானிகளுக்கும் வித்தியாச ங்கள் காணாமல் போவதைக் கவனிக்கலாம்.

## தேடல்கள் – ஆன்மிகத்தின் அடிப்படை

மனிதர்கள் மட்டுமில்லை, உலகில் உள்ள உயிர்களெல்லாமே எதையாவது விடாமல் தேடுகின்றன. அதனால் வாழ்க்கையே ஒரு தேடல்களுடன் இணைந்த பயணமாகக் கொள்ளலாம்.

வாழ்க்கையை ஒரு ரயில் பயணமாக, நாடக மேடையாக, என்று பல விதமாக அலசினார்கள் ஞானிகள். இதை பின் ஒரு அத்தியாயத்தில் அலசுவோம்.

நாம், இந்த புத்தகத்திலே வாழ்க்கையை ஓட்டங்களாகவும் உயிர்களை (இடைவிடாது) ஓடுபவர்களாக சித்தரிப்போம். வாழ்க்கையை இந்தக் கோணத்தில் காணும்போது ஆன்மிகத்தின் அடிப்படை அழகாக வெளிப்படும்.

## ஞானிகள், ஒரு வித்தியாசமான தேடுவோர்.

நாமெல்லாம், கண்ணால் கண்டதை கேட்டதை எல்லாமே தேடுவோம். அதிகாரம் அங்கீகாரம் என்றும் உலகிலுள்ள எல்லாவற்றையும் அடைவதற்கு விரும்புகிறோம். பொன்னையும் பொருளையும் தேடியே நமது வாழ்க்கையை நகர்த்துகிறோம்.

நம்மில் சிலர் வினோதமாகவும் வித்தியாமாகவும் உள்ள தேடல்களில் ஈடுபட்டிருப்பதைக் காணலாம்.

இவர்களில், கண்ணுக்குத் தெரியாத கடவுளின் அருளைத்தேடிச் சென்றவரும், நான் யார் எனக்கும் இறைவனுக்கும் என்ன தொடர்பு என்று தனக்குளேயே எழுந்த கேள்விக்கு விடைதேடிய சிலரும், தாடி வளர்த்து, உறவுகளை உதறிவிட்டு, காடு, மலை, தனிமை என்று தேடிப் போனவர்களும் உண்டு.

கடவுளை, உண்மையை – என்று கண்ணிற்குப் புலப்படாத பலவற்றைத் தேடும் மக்கள் என்றுமே இருந்தார்கள்.

சித்தர்களைப் பற்றிய நூல்களில், ஒவ்வொரு யுகத்திலும் பல்லாயிரம் ஞானிகள் இருந்ததாக குறிப்புகள் உள்ளன.

## நாம் நன்றாக அறிந்த தேடுவோர்:

ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவாவது கிடைக்குமா? அடுத்த வேளை உணவு எங்கே கிடைக்கும் என்று தேடும் மக்களே உலகில் மிக அதிகமான இருக்கும்போது, ஞானிகளை மட்டுமே, நமது உலகம், தேடுவோராக அங்கீகரிக்கிறது.

உயிர்கள் உள்ள வரை இப்படி பலவிதமான தேடுதல்கள் நடைபெறும்.

இந்த அத்தியாயத்திலிருந்து ஆரம்பித்து, உங்கள். மூளையை அதிகமாக பயன்படுத்த வேண்டும்.

உங்கள் வசதி எப்படி ?

அதுவும் மிக சுலபம்தான், உங்களின் ஊகிக்கும் திறமையை, உபயோகிக்க வேண்டும். மனக் கண்ணால் காணும் சக்தியை. வளர்க்க வேண்டும். பிறகு, இந்த திறனை முழுவதாகப் பயன் படுத்தலாம்.

# அத்தியாயம் 4

## தேடல்கள் – ஞானிகள் – பயணங்கள்

### தேடல்கள்

எவரும், எந்த தேடல்களில் வாழ்க்கைத் தொடங்கியாலும், எல்லவித தேடுதல்கனின் முடிவில், மிக மிக அதிக மதிப்புள்ள ஒன்றை ஒருவர் அடைந்தார் என்றால், அது பிரமனைப் பற்றிய அறிவுதான்.

எல்லா விதத் தேடல்களும் உயிர்களின் பயணங்களுக்குக் காரணமாகிறது. சாதாரண மக்களான நாம் செய்யும் பயணத்தை வாழ்க்கைப் பயணம் அல்லது பொருள் பாதைப் பயணம் என்று சொல்லலாம்.

எல்லா உயிர்களும் பல பிறவிகள் எடுப்பதாக ஞானிகள் சொல்கிறார்கள். என்னைப் போன்ற சிலர் விஞ்ஞானிகளையும் மெய் ஞானிகளையும் சுத்தமாக நம்புவார்கள்.

தங்களை எல்லாம் அறிந்தவராக உணர்ந்த பலர், மறுபிறவியை நம்பாமல் இருக்கலாம். தவறில்லை. இந்த வித மனப்போக்கு மனிதர்களை நன்றாகவே ஓடவைக்கும். அது பிரம்மாவுக்கு நல்லது. மாயாவுக்கு மிகவும் பிடிக்கும்.

ஏன்? போகப்போகத் தெரியும்.

நமது பாதையிலே

பொருள்பாதை என்ற பாதையிலே பலவித மக்கள். கிடைக்கும் ஊதியதிற்கும் அதிகமாக உழைக்கும் மக்கள்,

உழைக்காமலேயே பிழைக்கும் மக்கள், லஞ்சத்தில் ஊறிய அரசு ஊழியர்கள் மற்றும் அதிகாரிகள், திருடர்கள், கொள்ளைக்காரர்கள், கடத்தல்காரர்கள், அரசியல்வாதிகள், மதத்தலைவர்கள், சமூகவிரோதிகள், தேசத் துரோகிகள், தீவிரவாதிகள், நல்ல மருத்துவர்கள், நியாயத்தை விலைக்கு விற்காத சில நீதிபதிகள், அதிகாரத்தை தவறாக பயன்படுத்தாத ஒரு சில போலீஸ் அதிகாரிகள், வாங்கிய சம்பளத்திற்கு அதிகமாகவே உழைக்கும் ஓரிரு அரசு அதிகாரிகள். சமூக நலனில் அக்கரை கொண்ட மக்கள் என்று சிலர். பிராணிகள் மீது அன்புகாட்டுவோர், சுற்றம் சூழ்னிலையில் அக்கரை கொள்வோர் – பட்டியல் மிக மிகப் பெரியது !

## ஞானிகளின் பாதையிலே:

ஞானிகளின் பாதையை அறிவுப்பாதை அல்லது அருட்பாதை என்றும் அவர்கள் பயணத்தை அருட்பயணம் என்றெல்லாம் அழைக்கிறார்கள். பொருள்பாதையிலே வாழ்கையைத் தொடங்கி, நல்ல, தீய வழிகளில் மாறி மாறி நடந்து, பல பிறவிகள் எடுத்து நல்ல வழியிலே கடந்து, இறுதியாக நாம் எல்லொருமே ஞானிகளின் பாதையை அடைவதாக, நாம் அறிகிறோம்.

## ஞானிகளைப்பற்றி நாம் ஓரளவு தெரிந்து கொண்டது:

க. ஞானிகள் எல்லோருமே, ஆன்மிகப் பாதையில் பயணம் செய்யும் மக்கள். இவர்களில் பலர், இந்தப் பாதையில் வரும் முன்னால், சிலர் மதங்கள் காட்டிய வழிகளில் தங்கள் வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்கியிருக்கலாம்.

உ. ஞானிகள் எல்லோருமே, தனிப் பயிற்சிகளாலும், ஒரு குருவின் உதவிகளால் மட்டுமே உயரலாம் என்பதில்லை.

ங. இவர்கள் ஒவ்வொருவரும், ஆன்மீக உலகில் நுழைய ஒரு காரணம் இருந்ததாக நாம் படித்திருப்போம். உன்னிப்பாகக் கவனித்தால், அது உண்மையாக இருக்க நியாயம் இல்லை.

ச. ஞானிகள் ஒவ்வொருவரும், விதவிதமான கல்வி, குடும்பம் மற்றும் சமூகப் பின்னணியிலிருந்து வந்தவர்கள். சித்தர்களைப் பற்றிய புத்தகம் ஒன்று, இந்த கருத்தை நிரூபிக்கும் வகையில் பல பிரபலங்களைக் குறிப்பிட்டு, இவர்கள் எந்த சாதியில் பிறந்தவர்கள் என்பதைக்கூடப் பட்டியலிட்டுத் தந்துள்ளார்கள்.

ரு. வாழ்க்கையில் மிகவும் உயர்வாகக் கருதப்படுவது ஆன்மீகப் பாதை. அதில் பயணம் செய்பவர்களுக்கு மதங்கள் ஒரு ஏணியைப்போல.

அவர்கள் மதத்தின் துணையோடு ஆன்மிக வாழ்கையை தொடங்கினாலும், ஒரு கட்டத்தில், அவர்கள், மதம் என்ற சிறிய வட்டத்திலிருந்து வெளியேறி ஆன்மிகம் என்ற மாபெரும் வட்டத்தை (மாவட்டம்)அடைகிறார்கள்.

ஆன்மீகம் என்ற (மா) வட்டத்தை அடைந்தபின், மதம் என்ற ஏணி அவர்களுக்கு அவசியம் இல்லை.

சூ. இவர்களில் சிலருக்கு சாதாரண மக்களுக்கு இல்லாத (அமானுஷ்ய) சக்திகள் இருப்பதைக் கண்டு நேரடியாக அறிந்தவர்கள் சிலர் எழுதி வைத்ததால் நாம் படித்துத் தெரிந்து கொண்டோம்.

மக்களுக்கு தங்கள் வாழ்க்கைப் பயணம் இனிதாக அமைய பொருள் பாதையை செப்பனிட்டு தந்தார்கள் புனிதர்கள். அவர்களின் வாழ்க்கையைப் படிக்கும் போது அவர்கள் மக்களைத் தன் அமைத்த பாதையில் நடத்திச் செல்ல பல அதிசயங்கள் நிகழ்த்தியது தெரியவரும்.

உதாரணமாக, தீராத நோய்களைக் குணப்படுத்துவது,

குருடருக்குப் பார்வை தருவது, வரவிருக்கும் நிகழ்ச்சிகளை முன்கூட்டியே அறிவது (அறிவிப்பது), இறந்தவரை உயிருடன் எழச் செய்வது,

பதினெட்டு சித்தர்கள் என்று அறியப்பட்டவர்கள் தமிழ்நாட்டில் பிறந்து யோக சாதனைகளில் ஈடுபட்டாலும் உலகத்தின் பல பகுதிகளுக்குச் செல்வதும் அங்குள்ள பல சித்தர்களுடன் தொடர்பில் உள்ளதையும் திரு பா.கமலக்கண்ணன் எழுதிய சதுரகிரியில் கோரக்க சித்தர்கள் என்ற புத்தகத்தில் காணலாம்.

★ சாகாவரம் பெற்று – அதிக வருடங்கள் உயிருடன் இருக்க.

★ தேக சித்தி – நரை திரை மாறும் யானை பலம் உண்டாகும்.

★ இறந்தவரை உயிர்ப்பிக்கும் சஞ்சீவி

★ பிறர் கண்ணிற்கு தெரியாமல் மறைவது

★ விரும்பிய இடத்தை வினாடிகளில் சேர்வது .

இவர்கள் சில மூலிகைகளை உபயோகித்து தயாரித்த தைலம் மை ஆகியவற்றால் நம்ப இயலாத பல நலன்களைப் பெற்றார்கள்

இப்போது நாம் தெரிந்து கொள்ள வேண்டிய ஒரு பட்டியலைப் பார்ப்போம்:

### ஆன்மிகப்பாதையை அடைவது சுலபம்தான்.

நம்மைப் போல ஒரு சாதாரண மனிதர் ஞானிகளாக மாறுவதற்கு எதையும் புதியதாகப் பற்றிக் கொள்வதில்லை. மாறாக, தாங்கள் பற்றிய பொருள், பிடித்த பிடி, ஊறிய நம்பிக்கைகள், உடன் பிறப்புகள், சொந்த பந்தங்கள் என்று

அனைத்தையும்,மனதிலிந்து விட்டு விடவே கற்கிறார்கள்.

ஞானிகளைப்பற்றிய சில உண்மைகள்

★ ஞானிகளை, ஒருபோதும், மாயை தாக்குவதில்லை.

★ உண்மையான சாமியார் அல்லது, ஞானி நம்மைப் போன்ற சாதாரண மக்களிடமிருந்து எதையும் எதிர்பார்ப்பதில்லை. எதிர்பார்த்தால், சந்தேகமில்லாமல், அவர்கள் போலிகளே !

★ ஞானிகளின் வாழ்க்கை, ஒரு தொலை தூரப் பயணம்.

★ ஞானிகளுக்கு, மனிதர்களுக்கு (மாயையின் பிடியில் சிக்கியதால்) ஏற்பட்ட காயங்களை, அகற்றுவதில் சக்தியும் ஆர்வமும் உண்டு.

★ விஞ்ஞானிகளுக்கும் மெய்ஞானிகளுக்கும் மிகப் பெரிய ஒற்றுமை உண்டு. இருவருமே தங்கள் வாழ்க்கையின் பெரும் பகுதியை புலன்களில் சிக்காத அறிவைத் தேடுவதிலும், பெற்ற அறிவில் தேர்ச்சி பெறுவதிலும் செலவிட்டவர்கள்.

மனித வாழ்கைக்கு அவசியமான மருத்துவம், அறிவியல், வான சாத்திரம், கணிதம் என்று மனிதனின் அறிவாற்றலை கடந்த பல துறைகளில் ஆராய்ச்சியும் செய்துவந்து அதன் முடிவை மக்களுக்கு கவிதையாகவும், பாட்டாகவும், கட்டுரைகளாகவும் தந்திருக்கிறார்கள்.

★ ஞானிகளும், மிக உயர்ந்த அறிவை அடைந்த, விஞ்ஞானிகளே.

★ இந்த மெய்ஞானிகளில் பலர், பௌதிக அறிவில், அறிவியல் ஆற்றலில் நமது விஞ்ஞானிகளை பல ஆயிரம் ஆண்டுகள் அளவில் முந்தியிருக்கிறார்கள்.

★ மெய்ஞானிகளிடம் என்ன கிடைக்கும்?:

அறிவைத் தவிர வேறு எதுவும், உதாரணமாக செல்வம், பதவி

அதிகாரம் பொருள் உலக வெற்றி ஆகியவற்றை, அடைய இவர்கள் உதவியைத் தேடுவது பலன் தராது.

★ ஞானிகளாக மாற உலகம் முழுவதும் பின்பற்றுவது, நான்கு பாதைகளில் ஒன்று அல்லது அதன் கிளைகள். இவைகள் மாத்திரமே அருள்பாதைகள் இல்லை. இவை இல்லாமல் எல்லா உயிர்களிடத்திலும் (ஜீவ காருண்யம்) அன்பு செலுத்தும் தன்மை கூட, ஒரு மிக உன்னதமான பாதைதான்.

## சிறிய ஆன்மிகப் பயணங்கள்

நாம் எல்லோருமே, நம்மையும் அறியாமல் அவ்வப்போது சிறிய ஆன்மிகப் பயணங்கள் செய்கிறோம்.

இனிய இசையிலோ, அல்லது இறைவனின் (தியான நிலை) நினைவிலோ, மலரின் மணத்திலோ, இயற்கைக் காட்சிகளிலோ மனதைப் அவ்வப்போது செலுத்துகிறோம். அது மட்டுமல்லை சலசலக்கும் ஆற்று நீர் ஓட்டத்தைக் கவனிக்கும் போது, கடலலைகளைக் கவனிக்கும்போது தன்னை சற்று நேரம் மறந்த நிலையை அடைகிறோம் இல்லையா. அவற்றை சிறிய சிறிய ஆன்மிகப் பயணங்களை நாம் மேற்கொள்வதாகக் கொள்ளலாம்.

அந்த சிறிய நேரம், நமது மனமானது புலன்களால் சலனம் கொள்ளாமல், அலை பாயாமல், சிறிதேனும் சிதறாமல் இருக்கும் ஒரு நிலை. அதுவே அதிக நேரம் நீடித்தால், நாமும் ஞானியாகலாம்.

ஏதோ ஒரு கட்டத்தில் அருட்ப்பாதையில் பயணம் தொடங்கியாலும், அதாவது, ஆன்மிகத்தில் நாட்டம் வந்தாலும், முழு ஞானியாக மலர அல்லது வளர பல பிறவிகள் தேவைப்படுவதாக ஞானிகள் சொல்ல நாம் நம்புகிறோம்.

# அத்தியாயம் 5

## தவம் என்பது



மனம், ஒரு மாற்றில்லா விருப்பம் கொள்ள, ஒரு முயற்சி அல்லது பயிற்சி.

தவங்கள் வலிமையானவை. சக்திகளை சுலபமாக அடைய வழி செய்யும். ஆனால் சக்திகள் ஆபத்தானவை

பராசக்திக்கு சுப்பிரமணிய பாரதிகூட, ஒரு பட்டியலிட்டு வரம் கேட்டுப் பாடினார் (காணி நிலம் வேண்டும் ... ).

நம் எல்லோருக்குமே நாம் விரும்பியதை அடைய எவ்வளவு ஆசை? விரும்பியதை அடைந்தால் எத்தனை மகிழ்ச்சி? அதற்குண்டான உழைப்பிற்கு மட்டுமே நாம் தயாராக இல்லை.

ஒரு தாடி வைத்த ஆளைத் தேடிப்பிடித்து, அவர், ஒரு சில வாழைப் பழங்களுக்கு ஈடாக வசதியான வாழ்க்கையோ, அல்லது விரும்பிய செல்வங்களையோ தருவாரா என்று பார்க்கிறோம்.

அப்படி, வேண்டியது ஒன்றை அடைவதற்கு யாகங்களும் யோகங்களும் அவசியமில்லை. சாமியும் சாமியாரும் தேவையே இல்லை.

மாற்றில்லா விருப்பம் ஒன்று மட்டுமே போதும்.

(இதை நம்பத்தயாராக இல்லாதவர்களே அதிகம். இது பிரம்மனின் அவசியம். அதனால் மாயா செய்யும் சூழ்ச்சி).

## விருப்பங்கள் நிறைவேறினால்?

இங்கே ஒரு சிக்கல். நாம் விருப்பபட்டதை எல்லாம் அடைவது சரி. அப்படி அடைந்தது எல்லாமே நமக்கு ச ாதகமாக இருக்குமா? அதை நிச்சயமாக யாராலும் செ ால்லமுடியாது. விரும்பும்போது நாம் அந்த கோணத் தில் என்றுமே சிந்திப்பதில்லை. கிடைப்பதெல்லாம் ஒரு பாக்கேஜ்–டீல். நன்மையும் – தீமையும் என்றுமே கலந்திருக்கும். வேண்டியதை லாபங்களை அடைந்த பிறகு தான், அதில் உடன் வரும், வேண்டாத துன்பங்கள் தெரிகிறது.

## ஒரு குட்டிக் கதை:

இரண்டு நண்பர்கள் இருந்தார்கள்.

இருவருமே தங்களுடன் படித்த ஒரு குறிப்பிட்ட பெண்ணை மணம் செய்துகொள்ள ஆசைப்பட்டார்கள். ஆனால் இருவருக்குமே மற்றவரும் அதே பெண்ணை திருமணம் செய்து கொள்ள விரும்பது தெரியாது. காலம் சென்றது.

முதலாமவர் பெண்ணின் கரம் பிடித்தார். தன் விருப்பம்

நிரைவேறியதால் பெரும் மகிழ்ச்சி அடைந்தார்.

இரண்டாமவர், தன் விருப்பம் நிறைவேறாததால் ஒரு சில நாட்கள் துயரத்திலிருந்தார். பிறகு வாழ்நாள் முழுவதும் மகிழ்ச்சியாக இருந்தார். (முதலாமவருடைய மகிழ்ச்சி எத்தனை நாட்கள் நீடித்ததென்று தெரியாது இல்லையா?)

ஞானிகளும் அறிஞர்களும் மக்களுக்கு ஒன்று இரண்டல்ல, பல கதைகளைச் சொல்லி இதை விளக்கினார்கள். அது எதுவுமே நமது மர மண்டையில் ஏறுவதில்லையே.

இப்போது சில உண்மைச் சம்பவங்கள் ஒரு சிலவற்றைப் பார்ப் போம்.

## லாட்டரி சீட்டில் பரிசு:

சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன் பத்திரிக்கையில் படித்த ஒரு செய்தி. ஒரு மானிலத்தில், புதியதாக, லாட்டரி முறையிலான பரிசுஅறிமுகப் படுத்தப்பட்டது.

மக்கள் பலர், முக்கியமாக ஏழைகள், போட்டி போட்டுக் கொண்டு, பரிசுச் சீட்டுகளை வாங்கி, பரம ஏழைகளானார்கள். இதைத் தொடர்ந்து, பல உண்மைக் கதைகள் வெளிவரலாயின. சில மகிழ்ச்சிகரமான முடிவுகளும், பல துக்கமான முடிவுகளும் கொண்டது.

அதில் மிக வருந்தத் தக்க கதை ஒன்று.

கதாநாயகன் ஒரு படு ஏழை. ஏனென்றால், அவர் ஒரு சிறிதே அளவு நிலமுள்ள ஒரு விவசாயி. வயதில் முதியவர். அவருக்கு ஒரே மகள். திருமணமாகி, அவர்கள் எல்லோருமே, தாங்கள் காலம் காலமாக பழகிய ஏழ்மையில், அவர்களுக்குத் தெரிந்த சிறிய மகிழ்ச்சிகளுடன், ஒரு மாதிரியாக வாழ்ந்து வந்தார்கள்.

எல்லா மக்களையும் போல பரிசுச் சீட்டுகளை வாங்கி வாழ்வை

வளமாக்கிக் கொள்ள ஆசைப்பட்டார் அந்த முதியவர். அவர் போதாத காலம், முதல் பரிசாக, ஒரு லட்ச ரூபாய் அவருக்குக் கிடைத்தது.

அந்த செய்தி பத்திரிக்கைகளில், முதியவரின் புகைப் படத்தோடு, வெளி வந்தது.

சில வாரங்களாகியும் கையில் காசு கிடைத்தபாடில்லை.

இதனிடையே, அவருடைய சிறிய ஓலைக் குடிசையைப் பலர் முற்றுகை இட்டார்கள். இதில் உள்ளூர் பெரியவர்கள், ஜாதித் தலைவர்கள், அரசியல் தொடர்புள்ளவர்கள் என்று எல்லோருமே உண்டு. அவரவர்கள் பங்கிற்கு முதியவரை ஒரு பெரும் தொகையைத் தரும்படிக் கேட்டார்கள்.

பல நாட்கள் அடுத்துள்ள நகரத்திலுள்ள வங்கியைப் படை எடுக்க, சும்மா வந்த காசு தானே என்று, நகரத்திலும் முன்பின் அறியாத எத்தனையோ பேர் பலர் மிரட்டலுடனும், சிலர் பணிவாகவும் தொல்லை தந்தனர்.

கடைசியாக, வரிகள் போக ஒரு முழு லட்சம் காணவில்லை.

மிரட்டியவர்களுக்கு தந்தது போக மீந்தது என்னவோ சுமார் ரூபாய் ஐம்பதினாயிரம் மட்டுமே.

மருமகப்பிள்ளை, இதை எல்லாம் கவனித்து வந்தார். மாமனின் அதிருஷ்டத்தோடு தன் அதிருஷ்டத்தையும் சே ர்த்துப் பார்த்தார்.

நிலம் வாங்கி வளம் பெறக் காத்திந்த மருமகனுக்கு மீந்து இருப்பதில் பாதியைத் தருவதாக பெரியவர் சொல்ல, மருமகனுக்கு அதிர்ச்சி. அவர் தன் மனைவியையும் குழந்தை குட்டிகளுடன் பெரியவரின் குடிசையில் சேர்ப்பித்து விட்டு, மொத்தமாகக் காணாமல் மறைந்து விட்டார்.

நாட்கள் நகர, காசு கரைந்ததே தவிர தொல்லைகள்

குறையவில்லை. அதிருப்தியடைந்ததில் சிலர், பெரியவரின் அதிருஷ்டத்தில் பங்கு கிடைக்காத அதிருப்தியாளர்கள். அவர்களில் ஒருவர் முதியவரின் குடிசைக்குத் தீ வைத்தார்.

காத்து வந்த கரன்சி நோட்டுகள் தீயில் கருகுவதைக் காண, நிலை குலைந்து நோய்வாயில் சிக்கிய முதியவர், அதிவிரைவில் மரணம் அவரை விழுங்கியது.

தனியாக, கைவிடப்பட்ட பெரியவரின் மகள் தன் சிறு குழந்தைகளுடன் வாழ்க்கையை எப்படி நடத்தியிப்பாள்? ச ற்றே சிந்தியுங்கள்.

செல்வமும் ஒரு சக்திதான். தவம் இருந்து சக்திகளை கையகப்படுத்துவது, மிகவும் சுலபம். ஆனால் பழக்கமில்லாத எந்த சக்தியையும் கையாள்வது நமக்கு நலம் தருவதைவிடத் துயரம் தருவதற்கான வாய்புகளே அதிகம்.

ஒரு மெக்சிகன் ஞானி சொல்கிறார்.

உலகத்தில் பலவிதமான சக்திகள் உள்ளன. அதில் அதிகாரம், பதவி, செல்வம், மின்சாரம், அணுசக்தி, ஆயுதங்கள், அறிவு என அடுக்கிக் கொண்டே போகலாம்.

இது போன்ற பல சக்திகளைக் கையாள பலருக்கு ஆசை. ஆனால் இவற்றைக் கையாள. ஒருவருக்கு இந்த ச க்திகளைவிட அதிக சக்திகளைப் பெற்றிருக்க வேண்டும். இல்லையென்றால் நாம் விரும்பிப் பிடித்த சக்தியே நம்மை அழித்துவிடும்.

தனி மனிதர்களும் சரி, தலைவர்கள் என்று அதிக்காரத்தின் உச்சியில் வாழ்ந்து வந்த சிலரும், தங்கள் இறுதியில் துயரமான முடிவுகளைச் சந்தித்த சரித்திரங்களையும் புரட்டுங்கள். மேலே கூறிய உண்மை வெளிப்படும்.

மாற்றில்லா விருப்பமே தவமெனப்படும்

தவம் என்பது என்ன? ஒரே எண்ணத்தில் ஒரே சிந்தனையில் மனதை வைத்திதிருப்பது தானே? கடவுள் வருகிறாரோ இல்லையோ, வேண்டியது நிறைவேறும்.

(எனது வாழ்வில் இரண்டு நிகழ்வுகள், இதற்கு சாட்சி செ ால்லும் – ஆசிரியர்)

தவம் இயற்ற மனதைக் கட்டுப்படுத்துவது அவசியம். அறிவுள்ளவருக்கு மட்டுமில்லை, அறிவில்லாதவருக்கும் அது சாத்தியமாகும்.

**அறிவில்லாதவர் தவம், அழிவுகளை அள்ளித்தரும்.**

யோக சாதனைகள் நமக்கு பலவித சக்திகளைத்தரும்.

அறிவில்லதவர் செய்த யோக சாதனைகள் சிலருக்கு கிடைத்த சில சக்திகளையும் அதன் பின்விளைவுகளையும் பார்ப்போமா?

சிலவற்றை ஸ்வாமி ராமாவின் சுய சரிதையில் காணலாம். (கடைசி பக்கத்தில் சில புத்தங்களைப் பற்றிய விவரங்களைக் காணலாம்).

புராண இதிகாசங்களிலும் இதே செய்தி

பல அரக்கர்கள், கடவுளை நோக்கித் தவமிருந்து வரம் பெற்றார்கள். தவத்தில் பெற்ற வரங்கள் எதுவுமே அவர்கள் விரும்பியது போல வாழ விடவில்லை.

அரக்கர்கள் யார்? பெரிய பற்கள், பெரிய உருவம், பல யானைகளின் பலம் காட்டுமிராண்டிகளைப் போல உருவம் கொண்டவர்களா? சினிமா மற்றும் சின்னத்திரையில் அப்படிக் காண்பிப்பது நமது மனதில் அரக்கர்களைப் பற்றி ஒரு தாழ்வான எண்ணத்தைப் பதிய வைக்க.

உண்மையில் அரக்கர்கள் அறிவில்லாத மற்றும் சிந்தனையில்

குறைந்த மனிதர்கள் தான். அவர்களுக்கு ஒரு தனி உலகம் இல்லை. பல விதங்களில் பல சந்தர்ப்பங்களில் நம்மை ஒரு அரக்கராக உணரலாம்.

கடைசியாக, புராண இதிகாசங்களிலிருந்து ஒரு நிகழ்ச்சி.

பஸ்மாசுரன் என்ற ஒரு அரக்கன் தவமிருந்து இறைவனிடமிருந்து

ஒரு வரம் பெற்றான். தான் யார் தலையில் கை வைத்தாலும் அவர்கள் சாம்பல்லாகிவிட வேண்டும், என்பதே அது.

இறைவனிடமிருந்து கிடைத்த சக்தியை, அதைக் கொடுத்த இறைவனின் தலையிலேயே சோதிக்கத் துணிந்தான் அந்த அரக்கன்.

பதிலுக்கு அரக்கனை தன் தலையிலேயே கை வைத்துக் கொள்ளுமாறு இறைவன் ஒரு சிக்கலான சூழ்நிலையை உருவாக்க, பஸ்மாசுரன் பஸ்மம் ஆனான் என்பதே அந்தக் கதையின் சுருக்கம்.

## மிடாசுக்கு கிடைத்த வரம் – மிடாஸ் டச்

மிடாஸ் டச் என்று பள்ளிப் பருவத்தில் படித்த ஒரு கதை நினைவு படுத்திப்பாருங்கள். தான் எதைத் தொட்டாலும் அது தங்கமாக மாற வரம் பெற்றான் மிடாஸ். அவனுக்கு அந்த சக்தி கிடைத்ததும் என்னவெல்லாம் நிகழும்? சற்று யோசித்துப் பாருங்கள்.

மகளைத் தொட்டான். மகள் தங்கச் சிலையானாள். விரும்பியதை சாப்பிட முடியாது. துணிகள் கவசங்களாக மாறிவிடும்.

இந்த காலகட்டத்தில், இப்படி ஒரு சக்தி இருப்பது தெரிந்தால், பேராசைக்காரர்கள், மிடாஸின் கையையே ஒடித்துக் கொண்டு போய் விடுவார்கள் இல்லையா?

நாம் நமது தேடுதலைத் தொடருவோம்.

எதைத் தெரிந்து கொண்டதால் மனிதர்கள், ஞானிகளாக மாறினார்கள் என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா?

ஞானிகள் தெரிந்து கொண்டதை நாம் அவர்கள் எழுதியதையும், பேசியதையும் கொண்டு தேடுவோம். அதைத் தெரிந்து கொண்டால், நாமும், ஒரு மாதிரியான ஞானியாக மாறும் வாய்ப்பு கிடைக்கும். உண்மைதானே!

அடுத்ததாக நாம் தேடப் போவது தேடல்கள் மற்றும் தேடுவோரைப் பற்றியது.

வாசகர்களே,

வெவ்வேறு, கல்வி, அனுபவம், சமூக, பொருளாதார, மற்றும் கலாசார பின்னணியை கொண்டவர்கள் உங்கள் அனைவருக்கும், ஆன்மிகத்தைப் பற்றி சொல்ல வேண்டிய செய்திகள் பலவற்றை சேகரித்திருக்கிறேன். இவற்றை சிந்தாமல், சிதையாமல், மனதில் கொள்ளும் வகையில் எழுதுவது மிக கடினமான ஒரு முயற்சி.

இந்த புத்தகத்தை உருவாக்க சில நண்பர்களின் கடின உழைப்பும், உதவியும், அதோடு சில அத்யாயங்கள் பல முறை திரும்பத் திரும்ப எழுதவேண்டிய அவசியமும் ஏற்பட்டது.

ஆன்மிகப்பயணம் செய்வதால் என்ன பலன் கிடைக்கும்?

நம்மைப் படைத்த பிரமனை, வழியில், சந்திக்கலாம். முயற்சி செய்தால், பிரமனுடன் கைகுலுக்கலாம்.

# அத்தியாயம் 6

## ஞானிகளும் விஞ்ஞானிகளும்

மனித சமுதாயத்தில் பெரும்பாலான மக்களுக்கு ஒரு பிடித்த தொழில். தங்கள் கைகளுக்கு எட்டியதைச் சுருட்டிக்கொண்டு ஓடிவிடுவதும், கிடைத்ததை பிறர் கண்ணில் படாதவாறு ஒளித்து வைப்பதும்தான். இது நாம் அறியாததில்லை.

உண்மையான ஞானிகளும் விஞ்ஞானிகளும் மாத்திரம் இந்த நியதிக்கு ஒரு விதிவிலக்கு. மிக சிறியதாக புதியதாக ஒன்றை அவர்கள் அறிந்துவிட்டால் கூட, அதை பிரபலப் படுத்திவிடுவார்கள்.

இதில் மட்டுமில்லை, ஞானி—விஞ்ஞானி இரு கூட்டத்தினரின் தேடல்களிலும் ஒரு ஒற்றுமை உண்டு. இருவருமே மற்றவரைப்போல அதிகாரம், செல்வம், அங்காரம் என்று தேடி ஓடுவதில்லை.

ஞானி, கண்ணில் புலப்படாத ஆத்மாவையும் ஆண்டவனையும் தேடி ஓட, விஞ்ஞானியோ, கண்ணினால் காணமுடியாத, புலன்களினால் உணர இயலாத அணுவினுள்ளும் அணுவின் துகள்களையும் மனிதனின் மேம்பாட்டிற்கான சக்தியைத் தேடுவதும், அண்டத்தை அலசுவது நாம் அறிந்ததே!

இவர்களுள் ஒரே ஒரு சிறிய வித்தியாசம். விஞ்ஞானி நம்மைப் போன்ற மனிதர்களைவிட பல நூறு ஆண்டு அளவுக்கு அறிவில் முன்னேறியிருந்தாலும், ஞானிகளை விட பல ஆயிரம் வருடங்கள் அளவில் பின்னடைந்திருப்பதை நாம் அறியலாம்.

ஒருவிதத்தில், விஞ்ஞானிகள் தெரிவித்த அறிவில் சிறிய பாகத்தையும், ஞானிகள் தெரிவித்த அறிவில் ஒரு பாக

த்தையும் ஆதாரமாகக் கொண்டு, வாழ்க்கை என்ற ஓட்டத்தை நடத்திவருகிறோம்.

எந்த காலகட்டத்திலும் மனித சமுதாயத்தின் ஓட்டத்திற்கு இந்த இருவித ஞானிகளும் எப்படி ஆதாரமாக இருக்கிறார்கள் என்று சிந்தியுங்கள்.

## ஞானிகள் தேடியது என்ன?

சிலர் கடவுளைத் தேடிப்போனார்கள்.

வேறு சிலரோ தோல்விகளில் துவண்டு, காண்பது எல்லாமே பொய் என்று முடிவு செய்து, உண்மை என்ன என்று தேடப் போவார்கள்.

நான் யார்? இறைவனுக்கும் எனக்கும் தொடர்பு என்ன என்பது போன்ற கேள்விகளுக்கு விடை தேடியவர்கள் வேறு சிலர்.

எதை எப்பொழுது தேடினாலும், ஞானிகளின் தேடல்கள், மனதால் நடந்தேறும், ஒரு தொலை தூரப்பயணம்.

எந்த பயணத்திற்கும், பழகிய பாதைகள் உதவும். வழித் துணைக்கு ஆள் கிடைத்தால் மிகவும் நல்லது. அதைவிட, வழிகாட்ட பயண அனுபம் உள்ளவர்கள் கிடைத்தால் பயணம், மேலும், எளிதாகும், இல்லையா?

இந்த நியதிகள் ஆன்மிகப் பயணத்திற்கு விதிவிலகில்லை. இந்த வித்தியாசமான (மனதால் செய்யும்) பயணம், ஒரு அருள் பாதை அல்லது ஆன்மிகப் பாதையில் செல்வதாக அறியப் படுகிறது.

இந்தப் பாதையில் பயணம் செய்பவர்கள் வெவ்வேறு கட்டங்களில், ஒரு சாதாரண மனிதர்களின், அசாதாரண வாழ்க்கைக்குத் திரும்புவது அதிசயமில்லை.

பாதிப் பாதையில், அதுவரை கிடைத்த அறிவில், அதன் பயனில் மனம் மகிழ்ந்து, தொடங்கிய பயணத்தைக் கைவிட்டவர்கள் அனேகம்.

தேடியது கிடைக்காததில், மனம் உடைந்து, திரும்பியவரும் அனேகம் உண்டு.

இவர்கள் யாருமே கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை. அப்படியே, சிலர் இந்த பிறவியில் (பஸ்ஸை) தவற விட்டாலும், அடுத்தடுத்த பிறவிகளில் இந்த பயணம், விட்ட இடத்திலிருந்து விடாது தொடரும்.

ஆன்மிகப் பயணம் மாத்திரம், தொடங்கிய அந்தப் பிறவியிலேயே பயணம் முடிவதாக நினைக்க வேண்டாம். தொடங்கிய பிறகு, சில நூறு, அல்லது சில ஆயிரம் பிறவிகள் கூட எடுக்கலாம்.( மறு பிறவியில் நம்பிக்கை இல்லையா? (மிகச் சமீப காலம் வரை எனக்கும் நம்பிக்கை இல்லாமல் தான் இருந்தது. காஞ்சி முனிவரைப் பற்றிய அனுபவக் கட்டுரை ஒன்று என்னை மறுபிறவி என்ற தத்துவத்தில் உண்மை காண வைத்தது.)

இதில் வினோதம் என்னவென்றால், இந்த வித தேடல்களில் ஈடுபடும் மக்கள், தாங்கள் ஒரு பொழுதும் தேடவே தேடாத அறிவுகள், நினைத்தும் பார்க்காத பல அனுபவங்கள், விரும்பித் தேடாத சக்திகள் என்று எதை எதையோ அடைகிறார்கள்.

வரும் பக்கங்களில் ஞானிகளின் மனித சமுதாயத்தின் ஓட்டத் திற்கு எப்படி உதவுகிறார்கள் என்று பார்க்கலாமா?

# அத்தியாயம் 7

## உயிர்கள் – உடல்கள்

அடுத்து வரும் பக்கங்களில் விவாதிக்கப்படும் விஷயங்களுக்கு ஆதாரம் கீழே கண்ட பட்டியலில் காணலாம்.

1. இந்த பிரபஞ்சத்தில் உயிர் இல்லாதது எதுவுமே இல்லை!

2. நமது கண்ணில் சிக்கும் உயிர்கள், கண்களுக்குக் சிக்காத உயிர்வகைகளை விட மிகச் சிறிய எண்ணிக்கையாலானது,

3. எல்லா உயிர்களும் ஓடுகின்றன.

4. முக்கியமாக, உயிர்கள், பலபரிமாணங்களில் ஓடுகின்றன

5. பல லட்சம் சிறிய உயிர்கள் சேர்ந்து ஒரு பேருயிராகிறது.

6. பேருயிரின் நலனுக்காக சிறிய உயிர்கள் தொடர்ந்து ஓட வேண்டும்.

7. சில உயிர்கள் ஓடுவதில்லை – அவைகளை நாம் பெரிதும் மதிக்கிறோம். அவர்களை ஞானிகளாக அறிகிறோம்.

நம்புவது கடினமாக இருக்கலாம். அடுத்துவரும் பக்கங்கள் நம்புவதற்கான ஆதாரங்களை அள்ளித்தரும்.

### உடலின் ஐந்து பாகங்கள்

உயிர் – உடலும் இணைந்த ஒரு கூட்டணியை, உயிர் என்றே சொல்லுவோம். ஞானிகள், உயிர் உடல்களை, ஒன்றின் உள் ஒன்றாக, ஐந்து அடுக்குகளால் (பகுதிகள்)

உருவானதாக சொல்கிறார்கள். (பஞ்ச கோஷா). இந்த ஐந்திலும் ஓட்டங்களைக் காணலாம்.

1. அன்ன மய கோஷா –நமது கண்களால் உணரக்கூடிய பாகம்.

கடைசி அல்லது வெளி உறை. உணவினால் தோன்றி, உணவினால் வாழ்ந்து, உயிர்பிரிந்த பின் மண்ணோடு கலந்து உணவுக்கு உரமாக மாறும் இதை உணவு உறை என்று அழைப்பது சரிதானே.

இந்த உறை ஐந்து, ஐந்து அடிப்படைப் பொருள்களால் உருவானதாக அறிகிறோம். மண், நீர், காற்று, நெருப்பு வெற்றிடம்.

2. பிராணமய கோஷா – பிராண சக்தியால் உருவானது,

புலன்களால் உணர இயலாதது. இது அடுத்த உள் உறை.

3. மனோன்மய கோஷா – மனம் அல்லது உணர்வுகள் எண்ணங்களைக் கொண்டது. இரண்டாம் உள் உறை.

4. விஞ்ஞானமய கோஷா – கற்பனா சக்தி, நினைவுகளை உள்ளுணர்வுகள் இங்கேதான் தங்கும். இது மூன்றாவது உள் உறை.

5. ஆனந்த மய கோஷா. ஆத்மாவை சுற்றிய, கடைசி உள் உறை.

ஆத்மாவை அல்லது உயிரைச் சுற்றி இந்த ஐந்து உறைகள் ஒன்றன் பின் ஒன்றாக அமைந்துள்ளதாக ஞானிகள் சொல்கிறார்கள்.

மேலும் விவரங்களுக்கு யோகா பற்றிய புத்தகங்களில் படிக்கலாம். இண்டநெட்டில் கொட்டிக் கிடக்கிறது. இந்த ஐந்து பாகங்களிலும் வெவ்வேறுவிதமான – முள்ளே

புக்கும் மூச்சுக்காற்று, வெளியேரும் காற்று, திரவங்கள், உணவு, ரத்த ஓட்டம், என்று பலவித ஓட்டங்கள் விடாமல் தொடர்வதை, நாம் உணரலாம்.

## பல சிறிய உயிர்கள் ஒரு பேருயிராகிறது

விஞ்ஞானிகளும் மெய்ஞானிகளும் ஒப்புக்கொள்ளும் ஒரு உண்மை, எல்லா உடல்களும் பல லட்சம் உயிர்களாலானது. சாதாரண மக்களால் இதை ஒப்புக்கொள்வது சுலபமில்லை.

உங்கள் வீட்டிவே எத்தனை உயிர் இருக்கும்? மனிதரை மட்டுமே நாம் அறிவோம். அரிசியில், கத்தரிக்காயில், கொதிக்க வைக்காத தண்ணீரில், சுத்தம் செய்யாத அறைகளில் உள்ள உயிர்களை நாம் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை. இதெல்லாம் கணக்கில் வந்தால் சில ஆயிரமாவது தேறும் இல்லையா?

அதாவது, நமது உடலின் உள்ளே, குறைந்தது சில லட்சம் உயிர்கள் இருப்பதை நாம் எப்போதுமே உணர்வதில்லை. இவற்றில் பல நமது புலன்களுக்கு அப்பாற்பட்டது. உடற் கூறு பற்றி அறிந்த மருத்துவர்கள், பல துறைகளைச் சார்ந்த விஞ்ஞானிகள் சொல்வார்கள் 'நமது உடல் திடப்பொருள்கள், திரவங்கள் மற்றும் வாயுக்கள் ஆகியவற்றால் ஆனது. அதாவது, ரத்தம், எலும்பு, சதை, நகம், தசை குடல் ஆகியவைசு.

நம் உடலின் பாகமாகிய இந்த ஒவ்வொன்றும் பல லட்சம் உயிர்களின் கூட்டமாக சமுதாயமாக நாம் நினைத்துப் பார்க்கலாம்

உயிர்கள் என்றால் என்ன?

உயிர்கள் ஒவ்வொன்றும் பிறப்பு – வளர்வது – தன் இனத்தைப் பெருக்குவது – தேய்வது – இறப்பது என்ற ஒரு வட்டத்தில் வருகின்றன.

ஒவ்வோரு வித உயிருடல்களுக்கும் உடல் பரிமாணங்களும் வாழும்காலம் வேறுபடுவதைக் கவனிக்கவேண்டும்.

நமது உடலின் உள்ளே இந்த தனி உயிர்கள் வளர வளர, மொத்தமாக, அதன் இனம் (எலும்பு, தோல், தசை என்று) ஒரு பொது நியதியின் அடிப்படையில், எல்லமே ஒரு சீராக வளர்கிறது.

(அளவுக்கு அதிகமாக வளரும்போது, அதை கான்சர் என்கிறோம்).

இதை மனதில் கொண்டு, ஞானிகள் தெரிவித்ததை ஆராய்ந்தால் நமக்கு, அண்டங்களை பற்றி, நம்மை படைத்த பிரமனைப் பற்றி, இதுவரை வெளிப்படாத அல்லது புலப்படாத ஒரு சில கோணங்கள் தெரியவரும்.

தெரிந்ததைக் கொண்டு தெரியாததை ஊகிப்போம். விஞ் ஞான ஆராய்ச்சியின் ஒரு பொதுவான அணுகு முறையில் ஒன்று தான் இந்த வகை. நாம் இப்போது செய்யப்போவது அதைத்தான்.

## பல சிறிய உயிர்கள் சேர்ந்து ஒரு பேருயிராகிறதோ?

நமது உடலில் ஒரு உயிர் இருப்பதையும், அது நிரந்தரமாகப் பிரிந்தால் மரணம் என்று அறிகிறோம்.

## சிறிய பெரிய – உயிர் உடல்கள்

நம்மை விட சிறிய உருவமும், குறைந்த வாழ்நாளும் கொண்ட உயிர்கள் கோடானு கோடி இருப்பதை, இன்று, பல விஞ்ஞான கருவிகள் உதவியுடன் ஒரளவு அறியலாம்.

கண்ணால் மட்டுமல்ல, இன்றளவிலுள்ள மின் உபகரணங்களையும் இயந்திரங்களைக் கொண்டும் காண முடியாத வைரஸ்கள் என்ற நுண் உயிர்கள் இருப்பதாக மருத்துவர்கள் சொல்லி, நாம் மருந்து சாப்பிட்டு வருகிறோம்.

ஆனால் – டாக்டரோ நோயாளியோ – யாருமே ஒரு வைரசைக் கூடப் பார்த்ததில்லை.

நம்மை விட சிறிய நுண்–உயிர்கள் எத்தனை சிறியதாக இருக்கலாம்?

நாம் ஒரு முறை மூச்சுக்காற்றை இழுத்து, அதை நுரையீரலில் அடக்கி, பிறகு மெதுவாக வெளியிட்டு நுரையீரலைக் காலி செய்வது மூச்சை வெளிவிடுவது ஒரு மூச்சுச் சுற்று. இந்த சுற்றிற்கு, நமக்கு பல வினாடிகள் எடுக்குமா?

நாம் ஒரு முறை சுவாசிக்கும் இந்த சிறிய நேரத்தில் பல கோடி நுண் உயிர்கள் பிறந்து வளர்ந்து இனப் பெருக்கம் செய்து, முதுமை அடைந்து, இறப்பது என்று பல ஆயிரம், சில லட்சம், அல்லது கோடி தடவை நடக்கும். அப்படியானால், அவைகள் உருவத்தில் எத்தனை சிறியதாக இருக்க வேண்டும்?

இதை விட சிறிய உயிர்களும் இருக்கலாம். அதேபோல நாம் உணரமுடியாத ஆனால் நம்மிலும் பல கோடி மடங்கு பெரிய உயிர்களும் இருக்கலாம்.

இந்த இரண்டும் நமக்கு புலப்படாத ஒரு முக்கிய காரணாம் நமது உணரும் கருவிகளின் அறியும் தன்மைக்கு உள்ள எல்லைகள்.

எதற்காக இந்த எல்லைகள்?

எல்லாம் ஒரு காரணமாகத்தான். வாசகர்கள் தங்கள் மனதின் கண்ணைத் திறந்து பார்க்க வேண்டிய ஒரு நேரம் வந்துவிட்டது.

புலன்களால் அறியக்கூடியதும், புலன்களால் அறிய முடியாததுமான எல்லா உயிர்களும் ஒன்றாக இணைந்து ஒட்டுமொத்தமாக செயல்பட வேண்டிய ஒரு கட்டாயம்.

கொசு ஈ போன்ற சிறிய உயிர்களுக்கு யானை மற்றும் மனிதர்கள் இருப்பது அதன் கண்களுக்குத் தெரிந்தால், நாம் அவை இருக்கும் இடத்தை அடையுமா?

அப்படி அடையாவிட்டால், இணைந்து செயல்படுவது எப்படி?

அண்டத்திலும் (Universe) பிண்டத்திலும் (Physical body) எல்லாமே, ஒருவகையில் நில்லாமல் ஓடுகின்றன.

உயிர்களுக்கும் அதைச் சுமக்கும் உடல்களுக்கும் உள்ள உண்மையான உறவை உணர்வதற்காக பல உதாரணங்களை, பலவிதமாக ஞானிகள் சொன்னார்கள்.

பயணிக்கும் ரயிலுக்கும் உள்ள உறவு தான். ஒரு பயணம் முடிந்தபின் (அடுத்த பயணம் தொடங்கும் வரை) ரயில் அவசியமில்லை. உண்மைதானே?

புதியதாகச் சொல்லவேண்டுமானால், அழகான வண்ண வண்ண அட்டை பெட்டிகளில் வைத்து. ஐஸ்கிரீமில் ஆரம்பித்து டி வி, பிரிட்ஞ் என்று எல்லாமே விற்கிறார்கள். உள்ளே உள்ள ஐஸ்கிரீமோ அல்லது டி.வி தான் உண்மை. ஆத்மாவுக்குச் சமம். தொழிற்சாலையில் அணிவிக்கப்பட்ட அட்டைப்பெட்டிகள் ஷோரூம் வழியாக ஒரு தனி மனிதர் வீட்டை அடைந்ததும், முதலில் கழற்றி எறியப்படுகிறது இல்லையா? மனித உடலும், அந்த அட்டைப் பெட்டியைப் போலத்தான்.

## அத்தியாயம் 8

## உடல்களும் ஒட்டங்களும்

எல்லாவித உயிர் இனங்களும் ஓடுகின்றன.

உயிர்கள் பல பரிமாணங்களில் ஓடுகின்றன.

உயிர்களின் தொழில், உடல்களை ஓட்டுவதுதான்.



ஓட்டங்கள் நின்றாலோ:

பருஉடல், ஓட்டங்களால் ஆனது. உடலும் அதன்

உள்ளேயும் விடாமல் ஓட்டங்கள் உண்டு. ஓட்டம் நின்றால், பருஉடலிலிருந்து உயிருடல் நிரந்தரமாகப் பிரிந்து விடும் அபாயம் உண்டு.

இந்த உயிர் – உடல் கூட்டணி, ஐந்து உணர்வுகளையும் ( ஒளி (பார்வை), ஓசை (சத்தம்), சுவை , நாற்றம், தொடு உணர்ச்சி) மற்றும் மனம், புத்தி, அகங்காரம் என்ற மூன்றும் சேர்ந்து மொத்தம் எட்டு தத்துவங்களைக் கொண்டது.

இந்த உயிர்–உடலுக்கு மாற்றுப் பெயர் சூக்கும உடல்.

சூக்கும உடலோடு, பரு உடல் ஒன்று இணைவதால், ஒரு மனிதனோ, மிருகமோ, பறவையோ அல்லது புழுபூச்சியோ உருவாகிறது.

சூக்கும உடலில் மனம் உள்ளது. அதில் எழும் விருப்பு வெறுப்புகளைக் கொண்டு மனிதன் (நன்மை, தீமை என்ற இருவினைகளை) செயல் படுகிறான்.

## நீர் வீழ்ச்சி தரும் பாடம்

பௌதிக விஞ்ஞானத்தின் பேசப்படுதும் சில அடிப்படைகள் நமக்கு பள்ளியில் படிக்காமலேயே புரியும். அதில் முக்கியமானது, உந்துதல் போன்ற சக்திகள் இல்லாமல் எதுவுமே அசையாது.

மலையிலிருந்து தொடங்கும் நீர் (புவி ஈர்ப்பினால்), நீர் வீழ்ச்சியாக உருவெடுத்து, சமவெளியை அடைந்த பிறகு ஆறாக மாறி பல நூறு மைல்களைக் கடந்து கடலில் கலக்கிறது. இது நமக்கெல்லாம் தெரியும். ஆனால் இது முழு உண்மையல்ல.

என்றாலும், இதை ஒரே ஒரு நீரோட்டமாக, கங்கை, காவிரி, மகாநதி, கிருஷ்ணா, கோதாவரி என்ற பெயர் கொண்ட ஆறுகளாக அறிகிறோம்.

**இந்த ஆறு சமாச்சாரத்தில் மூன்று உண்மைகள் உண்டு.**

ஆறு தொடங்குவது மலைமீது,

ஆறு முடிவது கடலில்.

இதன் இடைப்பட்ட பிரதேசத்தில், தொடர்ந்து தண்ணீர் ஓட் டத்தை நாம் காணலாம்.

இந்த ஓட்டத்தில் ஒரு படகு கூட விடலாம்.

**இந்த ஆறு சமாச்சாரத்தில், உண்மை இல்லாதவை:**

மலையில் பயணம் செய்ய ஆரம்பித்த தண்ணீர் எல்லாமே கடலை அடைவதில்லை.

அதில் சிறிதளாவு ஆவியாக மாறி வானத்தை அடைகிறது.

வேறு ஒரு சிறிய அளவு, போகும் வழி எல்லாம், பூமிக்குள் கசிந்து நிலத்தடியில் சேருகிறது.

இந்த நீரோட்டத்தில் ஒரு பகுதியோ, வழியிலுள்ள மரம் செடி கொடிகளுக்கு உணவாகிறது

இதைத்தவிர மனிதர்கள் மிருகங்கள் பறவைகள் பலவற்றின் வாயில் புகுந்து காற்றில், தரையில் சென்று மறைகிறது.

இன்னமு ம் எவ்வளவோ வழியாக மலையிலிருந்து பயணம் செய்யத் தொடங்கிய நீர் கடலில் சேராமல், பாதி வழியில் மறைகிறது. .

இந்த ஆற்றில், போகும் வழியெல்லாம், அங்கங்கே பெய்யும் மழை நீரும் ஆற்று நீரோடு இரண்டரக் கலந்து, ஆற்று நீராக நாம் நினைக்க, அது மிகுந்த தூரத்தை கடக்கலாம்.

சிறு துளிகளின் சிறிய அசைவுகளே, அதிக தூரம் செல்லும்

பெரிய ஆறாக, மாறுகின்றன.

ஆமாம், இந்த ஆறு – வரலாறு, எதற்காக இவ்வளவு விரிவாகச் சொல்லப்பட்டது என்று சிந்தித்தீர்களா?

ஆற்றில் போகும் நீர் பல கோடி துளிகளால் உருவானதைப் போல போலவே, நமது உடலில் ஓடும் ரத்தமும், இதர வாயுக்களும், திட, திரவங்களும் பல உயிர் உடல்களால் ஆனது. இவைகளின் ஓட்டத்தில் குறைவு எதுவும் வந்தால் நமது உடலில் தளர்ச்சி உண்டாகும், நம்மை பல நோய்கள் தொடரும்.

நம் உடலின் உள்ளே பிறந்து, வளர்ந்து, இனப்பெருக்கம் செய்து, முதிர்ந்து மடியும் உயிர்களை, நமது அண்டத்தின் நகரும் உயிர்களுக்கு ஒப்பிடலாம்.

நகராத உயிர் என்று நாம் நினைக்கும் தாவரங்களும் நகர்கின்றன. நமது அறிவில், மரம் செடி கொடிகள் ஒரே இடத்தில் இருக்கின்றன. அவைகள் இடம் பெயர்வதில்லை ஆகவே இவைகளை மனிதன், மிருகங்கள், பறவைகளை மற்றும் புழு பூச்சிகளை விடத் தாழ்ந்ததாக காண்கிறோம்.

உண்மையில், இந்த உயிர்களும் நகர்கின்றன. ஆனால் நகரும் விதம்தான் வித்யாசமானது. இந்த உயிரினம், தான் இருந்த இடத்திலிருந்து, தன் விதைகளை வெகுதூரம் போக வைத்து, தன் சந்ததிகளை நகர்த்துகிறது. அதை உறுதி படுத்த பல வகை உயிர்களை தன் பக்கம் இழுக்கிறது. எப்படி?

இந்த நகராத உயிரினம், தான் நகருவதற்கு, மற்ற நகரும் உயிர்களை பயன்படுத்துகிறது.

மனிதன் மற்றும் பல உயிரினங்களின் கண்களுக்கும் மூக்கிற்கும் விருந்தாக மலர்கள், கண்ணிற்கும், நாக்கிற்கும் விருந்தாக பழம் காய் வகைகள் குலுங்க இதர நகரும் வகை

களை தன்பக்கம் இழுத்து, அவர்கள் மூலமாக அதன் பூ, காய் கனிகளை வெகு தூரம் எடுத்துச் செல்ல, (உபயோகிக்க), அதோடு விதைகள் நகர்ந்து அங்கங்கே, செடிகளாக முளைக்க), இந்த வகை உயிர்கள் வெகுதூரம் செல்கின்றன. இதோடு மட்டுமல்ல தாவர விதைகள் காற்றில், மழைநீரில் கலந்தும் நகர்கிறது.

## தாவரங்களைப் போன்ற மனிதர்கள்.

நமது மூதாதையர் பலர் பிறந்த மண்ணை விட்டு எங்குமே நகர்ந்திருக்க மாட்டார்கள். பஞ்சம் புயல் போன்ற சில இயற்கையின் சீற்றங்கள் சிலரை இடம் பெயரவைக்கும். வெகு சிலர் பல தலைமுறைக்கு முன்னால், தங்கள் கிராமத்தை விட்டு சிலர் அடுத்துள்ள நகரங்களுக்குள் புகுந்தார்கள். அவர்களை மற்றவர் அதிசயப் பிறவிகளாகவே பார்த்தார்கள்

அடுத்த சில தலைமுறைளில், மானிலத்தின் பல பகுதிகளை அடைந்தனர். சமீப காலத்தில் மக்கள் பாம்பே, தில்லி என்று தூரத்தாலும் மொழியாலும் வேறுபட்ட இடங்களில் குடி பெயர்ந்தார்கள்.

இந்த காலத்தில் கடல் கடந்து பல்வேறு கண்டங்களை, அதிலுள்ள நாடுகளுக்கு நமது மக்கள் இடம் பெயரத் தொடங்கிவிட்டார்கள். தாவரங்கள் போலவே மனிதனும், சந்ததிகள் மூலமாக கண்டம் விட்டு கண்டம் நகர்கிறான் இல்லையா?

## நம் உடலினுள் ஓட்டங்கள்

மனிதன் உடம்பின் உள்ளேயும் இரண்டுவித உயிர்கள். ஒன்று, அசையும் உயிர்வகை மற்றது, அசையா உயிர்வகை. ரத்தம், நல்ல வாயு, கெட்ட வாயு, பல வித அமிலங்கள் நகரும் தன்மை கொண்டவை. மாறாக பல குடல், எலும்பு, சதை, கணையம், பித்தப்பை, நுரையீரல், இருதயம் எல்லாமே

அசையாது. இந்த இரண்டு வகையும் மனிதன் நகரும் போது தானும் சேர்ந்தே நகர்கின்றன. அதன் உருவ அளவுகளின் அதிகரிப்பு அல்லது மாற்றங்களும், ஒருவகை ஓட்டமே!

அப்படியானால், நமது ஓட்டங்களின் குறைவு, யாரைப் பாதிக்கும்? பிரமனுடைய ஆரோக்கியத்தைத் தான்.

மாயாவின் வேலைகள்

உயிர் உடல்களை உருவாக்குவது,

தேவையை அனுசரித்து தேவைக்கு அதிகமான உயிர் உடல்களை அழிப்பது.

மீதமுள்ள உள்ள உடல் உயிர்களை ஓடவைப்பது .

அந்த ஓட்டங்களை நிருவகிப்பது.

எல்லா உயிர் உயிர் உடல்களுக்கும் ஓடாமல் இருப்பதே விரும்பிய அல்லது இயற்கையான நிலை.

ஒவ்வொருவர் மனதிலும் பல பொய்களை நுழைத்து, உண்மைகளை மறைத்து, அந்த பொய்களின் அடிப்படையில் எல்லா உயிகளையும், மாயை, தன் சக்தியால் ஓடவைப்பதை நாம் உணரலாம்.

மாயாதான் இவைகளை செய்வதாக எப்படி நம்புவது?

ஒவ்வொரு இயக்கத்திற்கும் ஏதோ ஒரு உந்துதல் தேவை, இல்லையா? புவிஈர்ப்பு சக்தி என்று விஞ்ஞானிகள் சொ ன்னார்கள், கண்ணால் காணமுடியாது ஆனால் செயல்களில் உணரமுடிகிறது. நாமும் அதே பெயரில் குறிப்பிடுகிறோம்.

வேறு ஒரு சக்திக்கு மின்சாரம் என்றார்கள். இன்று, இந்த சக்தியின் இயக்கம் இல்லாமல் நாம் இல்லை என்ற நிலை உள்ளது. விஞ்ஞானி வைத்த பெயரை நாம் சொல்லத் தயங்கவில்லை.

மெய்ஞானி, இந்த அண்டத்தை இயக்கும் சக்திக்கு மாயா என்று பெயரிட்டார்கள். அதை ஏற்றுக்கொள்ளத் தயக்கம் ஏன்?

# அத்தியாயம் 9

# ஓட்டங்கள்



வாழ்க்கையைப் புரிந்து கொள்வோம். ஏனென்றால் வாழ்க்கையைப் புரிந்து கொள்ளாமல் நலமாக வாழ முடியாது.

அதுமட்டும் இல்லை, வாழ்க்கையை சரிவர புரிந்து கொள்ளமல் ஞானிகளையும் சரி, ஆன்மிகத்தையும் சரி, புரிந்துகொள்வது கடினம். இந்த இரண்டையும் புரிந்து கொள்ளாமல் பிரம்மனைச் சந்திப்பது சிறிதும் சாத்தியம் ஆகாது.

**வாழ்க்கையை மூன்று பரிமாணங்களில் காண்போம்.**

வாழ்க்கையை சில உதாரணங்களையும் உவமானங்களையும் கொண்டு விளக்கினார்கள் ஞானிகள். அதில் முக்கியமான இரண்டைப் பார்ப்போம். மூன்றாவதாக, எல்லா உயிர்களின் வாழ்க்கையும் ஓட்டங்கள்தான் என்ற ஒரு புதிய கோணத்திலும் அலசுவோம்.

இதில் ஒரு லாபம் என்னவென்றால் ஆன்மிகம் புரியாவிட்டாலும் ச ாதாரண வாழ்க்கையை நன்றாக புரிந்து கொள்வதால் கோபம், மன வருத்தம், துக்கங்கள் எல்லாமே குறைந்த (அறவே இல்லாத) வாழ்க்கை நடத்தப் பயன்படும்.

எனக்கு துயரங்கள், துன்பங்கள் பெரும்பாலும் எங்கிருந்து வருகின்றன்?

(1) என் உடலை வருத்தும் பிணிகள் – நோய்கள்.

(2) என் இழப்புகள், நான் அடையும் நஷ்டங்கள்.

(3) எனக்கு சமூகத்தில் ஏற்படும் தோல்விகள் மற்றும் இறக்கங்கள்.

இதைவிட அதிக அளவில் பாதிப்பது என்னைச் சேர்ந்தவர் களுக்கு வரும் :

(1) உடலை வருத்தும் பிணிகள் – நோய்கள்.

(2) இழப்புகள், அடையும் தோல்விகள் மற்றும் நஷ்டங்கள்

(3) சமூகத்தில் ஏற்படும் இறக்கங்கள்.

பிறக்கும்போது இந்த பிரச்சனைகள் ஒன்றும் அறியாமல் இதை சமாளிக்கும் அறிவும் இல்லாமல் பிறக்கிறோம். வாழும் காலத்தில் தோல்விகளால் வாட்டப்பட்டு துயரங்களால் துரத்தப்பட்டு, பாதிப்புகள் மனதைவாட்ட, சிறிது சிறிதாக இவற்றைச் சமாளிக்கத் தேவையான அறிவை அடைகிறோம்.

ஏதோ ஓரளவு தோல்விகளைச் சமாளிக்கத் தேவையான அறிவு

வளர்ந்தபோது, முதுமை நம்மை இறுக்கிப் பிடிக்க, செயல்பாடுகள் குறைந்து, தளர்ந்து, ஓய்ந்துவிடுகிறோம்.

பிறவி எத்தனை எடுத்தாலும், எல்லா உயிர்களும் அனுபவிக்கும் கொடுமை இதுதான். ஏன்?

இப்படி நிகழச்செய்வது மாயா. காரணம்? உயிர்கள் ஓடவேண்டும் ஓடாவிட்டால் பிரமன் துன்புறுவார்.

தானும் ஓடாமல் பிரமனும் துன்புராமல் இருக்க வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்?

ஒரு சாலை அமைக்கும் வேலையில் பல தொழிலாளிகள் ஈடுபட்டிருக்கிறார்கள். நாமும் அதில் ஒருவர்.

வேலையில் சேராவிட்டால் சாப்பாடு இல்லாமல் தொல்லைபட வேண்டிவரும். வேலை செய்தாலோ, வெயிலின் கடுமை, உழைப்பில் கிடைக்கும் வலிகள் மற்றும் காயங்கள் தப்பாது.

என்ன செய்தால், நமக்கு வேலை கூலி எல்லாம் கிடைக்கும் ஆனால் வலிகள் வராது?

மேற்பார்வையாளராக உயர்வது ஒன்றுதான் வழி இல்லையா? மற்ற தொழிலாளிகளை ஊக்குவித்து நன்றாக வேலை செய்ய வைப்பது. காயம் அடைந்த தொழிலாளிகளுக்கு வலி நீக்கி அவரை திரும்பவும் வேலையில் கவனம் கொள்ளச் செய்வது.

இது போதாதென்று, மேலும் நல்ல மேற்பார்வை செய்ய தகுதியானவர்களைத் தயார் செய்வது.

ஞானிகள் ஒருவிதத்தில் மேலே விவரித்த சூப்பர்வைசர்கள் அல்லது மேலாளர்கள். தான் ஓடாமல் மற்ற மனிதர்களின் ஓட்டங்கள், தடையில்லாமல் தொடர வைக்கும் மேலாளர்கள். இவர்கள் சே வையில் பிரமனும் மகிழ்வான். அதன் பொருப்பை ஏற்றுள்ள மாவையும் மகிழ்வாள்.

## அத்தியாயம் 10

## ஞானிகள் சொன்னது

நம்மை நாலும் அறிந்தவர்களாவே அறிகிறோம். கேள்விப் படாத ஒன்றை யார் சொன்னாலும் சுலபமாக நம்புவதில்லை. எல்லாவற்றிகுமே தடையங்கள், சாட்சிகள் இருக்கிறதா என்று கேட்போம். அதுவும் நல்லது தான்.

### ஞானிகள் – சித்தர்கள் – சொல்கிறார்கள்

நாம் குறிப்பிடும் சித்தர்கள், நம் நாட்டில் பிறந்தவர்கள். இவர்கள் வாழ்க்கை சுவாரசியமானது. இவர்கள் செயல்கள் அதிசயமானவை.

தமிழில் பலர் அழகான கவிதைகள் எழுதியுள்ளார்கள். இருக்கும் இடத்திலிருந்தே, உலகின் பல பகுதிகளிலுள்ள ஞானிகளுடன் தொடர்பு கொண்டவர்கள்.

(எனக்கு படிக்கக் கிடைத்த சில புத்தகங்களின் விவரங்கள் அடங்கிய பட்டியலை, கடைசி பக்கத்தில் பார்க்கலாம்).

சித்தர்கள், உலகெங்கும் தோன்றிய மற்ற ஞானிகளைப் போல. அறிவில், ஆற்றலில் நம்மை விட (கணக்கிட முடியாத அளவு) மிகவும் உயர்ந்தவர்கள்.

பல கோடி ஞானிகள், கற்று உணர்ந்த பிறகு, காணாமல் போய் விட்டார்கள். வெகு சிலர் தங்கள் பயணத்தை, கட்டுரைகளாக, பாடல்களாக, கவிதைகளாக நம் உபயோகத்திற்கு தந்துள்ளார்கள்.

நம்மைப் போல சாதாரண மனிதர்களுக்கு அறிவதில் எல்லைகள் உண்டு. அது மட்டுமில்லை. நம்மில் பெரும்பாலானோர், குறுகிய எண்ணங்கள் கொண்டவர்கள். நமது சிந்தனைகள் புலன்களால் உணர்வதை மாத்திரமே சுற்றிவரும். இப்படிப்பட்ட குறுகிய எண்ணங்கள், அறிவுப் பயணத்தில், பெரும் தடைகள்.

அடுத்ததாக, புலன்களால் உணர முடியாதவைகளை – ஆன்மாவோ, அணு விஞ்ஞானமோ – அறிந்து கொள்ள விருப்பமோ அல்லது ஆவலோ மக்களுக்கு, மிக குறைவு.

அப்படி ஆவல் உள்ளவர்களுக்கும் அதை அறிந்து கொள்ள தேவையான அடிப்படை அறிவோ, மிக மிக மிகக் குறைவு.

புதிய அறிவை புரிந்து கொள்ள, மொழி தெரிந்தால் மாத்திரம் போதாது. மெய் ஞானமோ, விஞ்ஞானமோ, சொல்பவர்கள் அறிந்ததில் ஒரு சிறிய பாகமாவது நாம் அறிந்திருப்பது அவசியம்.

இன்றய விஞ்ஞான அறிவு வளர்ச்சியின் காரணமாக, சித்தர்கள், ஞானிகள் சொல்வதை ஓரளவு ஊகிக்கத் தேவையான அந்த சிறிய அறிவை நாம் எல்லோரும் அடைந்திருக்கிறோம். அதைக் கொண்டு, நாம் அவர்கள் சொல்வதிலிருந்து, நாம் பிரம்மாவை புரிந்து கொள்ள ஓரளவு நம்பிக்கையுடன் முயற்சி செய்யலாம்.

பாம்பாட்டி சித்தர் என்ன சொல்கிறார்?

பாம்பாடி சித்தரின் பாடல் மிக எளிமையாக இருப்பது என்னவோ உண்மை. ஆனால் அவர் பாடலில் சொல்லிய விஷயமும் நாம் புரிந்து கொள்வதும் வெவ்வேறு என்கிறார் இந்த பாடல்களை மொழி பெயர்த்து நமக்கு விளக்கிய ஸ்வாமி ஆத்மானந்தா. முதலில் ஒரு கவிதை / பாடலை கவனிப்போம்.

*அகண்ட பிண்டம் தந்த எங்கள் ஆதிதேவனை*

*அகலாமலே நினைத்தே அன்புடன் பணிந்து*

*எண்டிசையும் புகழ்ந்திட ஏத்தி ஏத்தியே*

*ஏக மனமாக நாடி ஆடு பாம்பே!*

அண்டம் என்பது அகண்டம் ஆனது. அண்டத்தில் உள்ளது தான் பிண்டத்தில் உள்ளது

அப்படிப்பட்ட உடலைத் தந்த ஆதிதேவனை, எட்டு திசை களிலும் போற்றிப் புகழும்படியாக அன்புகொண்டு பணிந்து, ஒரே மனமாக நாடி, பாம்பே நீ ஆடு. மனதை கட்டிப்போடு அகலாமலே நினைத்தே: என்பது நாம் நமது சிந்தனையை சிதறவிடாமல் ஒரே எண்ணத்துடன் (one minded-ness) இருக்கும் நிலையைக் குறிக்கும்.

மனதை குரங்கிற்கு ஒப்பிடுவார்கள். ஒரே இடத்தில் நில்லாமல் அங்கும் –இங்கும் எங்கும் குதித்து கும்மாளம் போடும் குரங்கைப் போன்றது நமது மனது. ஆன்மிக பயிற்சிகளில் முதல் கட்டம், நில்லாமல் அலைபாயும் நமது பொல்லாத மனதை, ஒருநிலைப் படுத்துவது.

மூச்சுப் பயிற்சி, தியானப்பயிற்சி, அல்லது வேறு பல ஆன்மிகப் பயிற்சிகள் எல்லாமே, மனிதனை இந்த நிலைகசு தயார் செயகிறது

இந்த மனப்பக்குவம் சாதாரணமாக நம்மை வந்து அடையக்கூடியது இல்லை. முறையான பயிற்சியும் விடா முயற்சியும் தேவை. அதே சமயம், எல்லோருக்கும் ஒரே விதப் பயிற்சி எளிதில் பயன் தராது. எனவே கணக்கில்லாத பயிற்சிகள் தோற்றுவிக்கப்பட்டு அவை புழக்கத்தில் இருப்பதைக் காணலாம்.

பல்வேறு பயிற்சிகளில் ஒன்று, மனதை ஒரு வார்த்தையில்

நிற்க வைப்பது. ஒரே வார்த்தையை. திருமபத் திரும்ப செ ால்லி, மனதில் இருத்த வெகுநேரம் மு யற்சி செய்வதை – ஜபம் என்கிறோம்.

உணர்வுகள் மனதை அடைவதைத் தவிர்த்து, மனதை ஒரு நிலைப்படுத்தும் மற்றொரு பயிற்சி அதை தவம் என்கிறோம்

குண்டலினி யோகா: இந்த பாடல்களில் வரும் பாம்பு, குண்டலினியை விழித்தெழ வைக்கும் என்று விளக்குகிறார். நமது முதுகுத் தண்டின் கீழே உறங்கிக் கொண்டிருக்கும் குண்டலினி எழுந்தாடினால், சித்தர்களின் நிலையை நாம் அடையலாம்.

இங்கே கவனிக்க வேண்டியது,

அண்டத்திலுள்ளதுதான் பிண்டத்தில் உள்ளது.

மேலே கண்ட, *பாம்பாட்டி சித்தரின்* பாடலில் இந்த வரி நேரடியாகவோ மறைமுகமாகவோ காணமுடியாது, உரையாசிரியர், வேதங்கள் இவ்வாறு விவரித்திருப்பதாகக் கூறுகிறார்.

## அண்டமென்றால் என்ன?

மேலே கண்ட வரியில் நமது ஆராய்ச்சியின் கரு உள்ளது.

இதை நமது மனம் தன் மனக்கண்களின் முன்னால் காண முடிந்தவர்கள் அதிக வேகமாக பிரமனை உணரமுடியும். இந்தக் கருத்தை வலியுருத்த, எளிதாக மனதிலே ஏற்ற, பின்னால் வரும் அத்யாயம் முயற்சிக்கும்.

இப்படித்தான் இருக்கவேண்டும்! ஒரு ஊகம்.

அகில அண்டமும் சேர்ந்து ஒரே ஒரு உயிர்தான். அதுதான் மதங்கள் சொன்ன பேருயிர்.

இந்த பேருயிர் நமது உடலுக்கு வெளியே, எங்கோ இருப்பதாக நாம் கற்பனை செய்து கொள்கிறோம். நாம், பிரம்மாவின் உடலில் ஒரு பகுதியாக கற்பனை செய்து பார்த்தால், பல ஞானிகளின் வார்த்தைகள் புதிய பொருள் கிடைக்கும்.

எல்லோருக்கும் ஒரு சூக்கும உடல்:

உடல் உயிர் இரண்மே தனித் தனிப் பொருள்கள். போற்றிப் பஃறெடை என்ற சைவசித்தாந்த சாத்திர நூலில் கீழேவரும் செய்தி இருக்கிறது:

தனு கரணமும் புவனமும் தந்து, அவற்றால் மனம் முதலால் வந்த விகாரத்தால் – வினை இரண்டும் காட்டி, அதனால் பிறப்பு ஆக்கிக் கைக் கொண்டும் மீட்டு அறிவு காட்டும் வினை போற்றி.

விளக்கம்

தனு கரணம் – சூக்கும உடலில் (நுண்ணுடல்) அதாவது, உயிர் – உடலில் அமைந்துள்ள மனம், புத்தி, அகங்காரம் எனும் மூன்று அந்தகரணங்களை குறிக்கும். நமது விஞ் ஞானம், இன்னமும் தலையிலுள்ள தலைச்சோறு எனப்படும் மூளையில் இருப்பதாக கருதுகிறது.

சிவன் – கடவுள் – அல்லது ஒரு சக்தி, ஒரு அழியாத உயிருடலைப் பிடித்து, உடலை உருவாக்கி, அதனுடன் உயிரை இணைத்து, நல்ல மற்றும் கெட்ட செயல்களைச் செய்ய வைக்கிறது ! நல்ல செயல் சரி. தீய செயல்களையும் செய்விக்கும் இறைவன் ஒரு சாடிஸ்டா ?

நிச்சயமாக இல்லை. இறைவனுக்கு இருவினையும் ச ாதகமாக இருப்பதால் (ஓட்டதிற்கு உதவுதால்) தீவினையை கண்டுகொள்வதில்லை. இதை அடுத்துவரும் புத்தகத்தில் காண்போம்.

# அத்தியாயம் 11

## அறிவுப்பாதையில் பிரம்மா!

### பிரம்மாவை எதற்காக அறியவேண்டும்?

அவசியம் இல்லைதான்.

அறிவுப் பாதையின் பயணம் செய்யும் போது அதன் எல்லையில், இருக்கும் பிரம்மாவை, நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், சந்திப்பது தவறாது. ஏனென்றால், அறிவின் எல்லையில் பிரம்மா இருக்கிறார்! தேடுவோர் அனைவருக்கும், தேடல் பயணம் முடிவு பெறும் இடம், பிரமனாகத்தான் இருக்கும். எனவே, இந்த பிரமனைப் பற்றிய அறிவு, அதாவது பிரம்ம ஞானம், ஞானிகளின் தேடலின் கடைசிக் கட்டமாகவே, இருக்க வேண்டும்.

### ஆன்மிகப்பயணம், உண்மையில் ஒரு அறிவுப் பயணம்

கடவுள்ளைத் தேடி, உண்மையைத் தேடி, நாம் அருள்பயணம் என்று நினைத்து தொடங்கிய ஆன்மிகப் பயணம் உண்மையிலேயே ஒரு அறிவுப் பயணம். எந்த வகை அறிவிலும் பல கட்டங்கள் இருப்பது நம் எல்லோருக்குமே தெரியும்.

பள்ளியில் கல்லூரிகளில் படிக்காவிட்டால், படித்த மற்றவரை விட ஏழ்மையில் நாம் தள்ளப்படுவோம். அதனால், படிப்பு அல்லது கல்வி அறிவு, அவசியம் என்று உணர்கிறோம். அதிகம் படித்தால் அதிக வளமான வாழ்க்கை கிடைக்கும், இல்லையா? ஐ ஐ டி, ஐ ஐ எம் போன்ற கல்விக்கூடங்கள்

மற்ற கல்விக் கூடங்களை விட அதிக தரம் உள்ளது இல்லையா? அதன் காரணமாகவே, அதில் பயிற்சி பெற்ற மாணவர்களுக்கு அதிக வருமானம் கிடைக்கிறது.

இந்த வகைக் கல்வி, மக்களுக்கு அன்றாட வாழ்க்கையின் அவசியத்தை பூர்த்தி செய்ய ஒரு தொழில் அறிவை அளிக் கிறது. முக்கியமாக இயற்கையை, அதில் பொதிந்துள்ள எண்ணற்ற செல்வங்களை – உலோகத்தை, மரங்களை, நிலத்தை, காற்றை, நெருப்பை – மக்களுக்கு பயன்படும் வகையில் செயல் பட வைக்க இந்த பள்ளிக் கல்விகள் பயன் தரும்.

பள்ளிக் கல்வியில் பல அடுக்குகள் அல்லது நிலைகள் உள்ளதல்லவா?

ஆரம்பக் கல்வி, நடுநிலைபள்ளி, பள்ளி இறுதி, பட்டப்படிப்பு, இளம்கலை, முதுகலை, ஆராய்ச்சி.

இந்தக் கல்வியில் அதிக நிலையை அடைந்தவருக்கு மற்றவரைவிட அதிக வருமானம் அதிக வசதிகள் அதிக மரியாதை அதிக அங்கீகாரம் எல்லாம் கிடைப்பது நமக்கு தெரியும். உயர்கல்விக்கு கடும் போட்டி நிலவுவது இந்த ஒரு காரணத்தினால் தானே?

## விரிவடையும் அறிவு

பூமியில், தனது கிராமத்தைத் தவிர எதுவும் இருப்பதாக உணராத மக்கள் ஏராளம் இருந்தார்கள். டெலிவிஷன் கண்டுபிடித்த விஞ்ஞானிகளுக்கு நாம் நன்றி சொல்வோம். இன்று, பட்டி தொட்டிகளிலிருந்து அசையாத மக்கள் குறைவு.

பூமியும் நவகிரகங்களும், சூரியனும் மாத்திரமே உள்ளது. மிகச் சிலரே,. இதைத் தவிர வேறு கிரகங்கள் எதுவும் இல்லை என்று நினைப்பவர்கள்

நமது சூரியன் பல கோடி சூரியன்களில், ஒன்று. நமது நவக்

கிரகங்கள் அதைப்போல கோடானுகோடி கிரகங்களுக்குள், ஒரு சில.

இதை வானவெளி ஆராய்ச்சியாளர்கள் சொல்லி, வெகு சிலரே அறிவார்கள். இந்த கோடானு கோடி கிரகங்களை ஒட்டு மொத்தமாக அண்டம் என்று சொல்லுவோம், இல்லையா?

ஆன்மிக அறிவு

அறிவுப்பாதையில் பயணம் செய்கையில், பௌதிகம், கணிதம், வான விஞ்ஞானம் என்று நமது அறிவு அதிகரிக்கும் போது, ஒரு கட்டத்தில் நாம் ஆன்மிக அறிவை அடைவதை உணரலாம்.

புலன்களுக்குள் சிக்காத எல்லாமே, ஆன்மிக அறிவு அல்லது ஆன்மா சம்பந்தப்பட்ட அறிவைச் சேர்ந்தது என்று சொல்லலாம். ஏனென்றால் ஆன்மா புலன்களுக்கு அப்பாற்பட்டது.

எல்லோருக்கும் சுலபமாக புரிந்து கொள்ள உதவும் வகையில் இப்படியும் சொல்லலாம்:

(க) உயிர்கள் ஓடுகின்றன. ஓட்டங்களால் அதில் காயங்கள் தோன்றுகின்றன. உயிர்கள் என்று அறியப்படுவது – பரு உடலோடு இணைந்த உயிருடல் (உயிர் உடலை பல மதங்களில் பலவேறு பெயர்களில் அறிபபடுகிறது. ஆத்மா, ரூ, சோல், என்பதாக).

(உ) உயிர்–உடலின் காயங்களுக்கு மருந்தாக ஆன்மிகப் பயணங்கள் அவசியமாகிறது.

(ங) இந்த உயிர் உடலின் தேவைகளை பூர்த்தி செய்ய பலகட்ட கல்வி இருப்பதாக கொண்டால், அதில் உயர்ந்த கல்வி அல்லது இறுதிக் கட்டக் கல்வி, நம்மை படைத்த

இறைவனைப் பற்றிய கல்வி, அல்லது இறைவனை அறிவது.

இந்த அறிவு கிடைத்துவிட்டால் மனிதனின் பருஉடலும் உயிர் உடலும் தேவையை விட அதிகமான சக்திகளை பெறும். அந்த இறுதிக் கட்டக் கல்வியின் முடிவில் நாம், பிரமனை அறிந்து கொள்வது தவறாது.

பிரமனை அறிந்து கொண்டால், மேலும் சிறிது முயற்சியில், பிரமனைக் கண்டு, அவருடன் கைகுலுக்குவது சுலபம்தானே ?

இதை அப்படியே சிலர் நம்பலாம். இதில் எதையுமே நம்பும்படியாக இல்லை என்று வேறு சிலர் சொல்லலாம். ஆனால், இந்த பக்கங்களில் படிக்கும் எதையுமே நம்பாதவர்களுக்கும், ஏதாவது பயன் உண்டா? உண்டு !

சாதாரண மனிதர்களின், தற்போதய கவனம் மற்றும் சிந்தனைகள் எல்லாமே நமது தினசரி வாழ்க்கையின் திசை தெரியாத பயணத்தில் ஆழ்ந்து, அற்ப நிகழ்வுகள், துயரம், தோல்வி, போட்டி, சண்டை பூசல்கள், போட்டிகள், பொறாமை, ஆற்றாமை, ஆகியவற்றால் நிரம்பி வழிகிறது.

இந்த புத்தகம் வாசகரை சிறிய ஆன்மிகப் பயணங்கள் செய்ய வைக்கும் . அது என்ன சிறிய ஆன்மிகப் பயணம் ? அதைப் பின்வரும் பக்கங்களில் பார்க்கலாம்.

சுருக்கமாக, நாம் அழுக்கான சிந்தனைகளிலிருந்து விடுபட்டு, நமது மனம் அழகான, சுவாரசியமான, தோல்விகளில்லாத, உயர்ந்த சிந்தனைகளுக்குத் தயாராகும்.

# அத்தியாயம் 12

## பிரமனைப்பற்றி ஒரு அறிமுகம்

**எச்சரிக்கை:**

மக்கள் பலருக்கு கணக்குடன் பிணக்குண்டு. அப்படிப்பட்ட வாசகர்கள், கடைசி வரிகளை மட்டுமே படித்தால் போதும்.

**பிரமனை அடையாளம் காண்போம்:**

அறிவுப் பாதையில் பிரம்மனைக் கண்டால் நாம் அடையாளம் கொள்ளுவது அவசியம் இல்லையா. அதற்காக, இப்போது பிரமனின் பரிமாணங்களை அறிய நமது ஆராய்ச்சியைத் தொடருவோம்.

வாசகர்களில் ஒரு சிலர், சில ஆன்மிகப் பெரியவர்கள் சொல்லி, அல்லது ஆன்மிக இலக்கியங்களை படித்து கீழே கண்ட சில வரிகளை வெவ்வேறு சந்தர்ப்பங்களில் அறிந்திருக்கலாம். இருந்தாலும் இதைக் கேள்விப்படாத சிலவற்றறைத் தெரிந்துகொள்ள, மீண்டும் ஒரு முறை காண்போம்.

(க) பிரம்மா கடவுள்களில் உற்பத்திக்கு பொருப்பு ஏற்ற கடவுள்

(உ) பிரம்மா ஒருவரல்ல .

(ங) பிரம்மா, நம்மைப் போலவே பிறந்து வளர்ந்து வாழ்ந்து மடியும் ஒரு பிறவிதான் என்றும்,

(ச) நமக்கு, பூமியைப் போல பல கோடி பூமிகளும், நமது சூரியனைப் போலவே லட்சக்கணக்கில் சூரியன்களும் கொண்ட ஒரு அண்டம் இருப்பது தெரியும். அதே போல, பிரம்மாவுக்கும் அவர் உலகத்தைப்போல கோடான கோடி பூமிகளும் (உலகங்கள்) சூரியன்களும் கொண்ட அண்டமும்

உண்டு.அதுவே பிரம்மாண்டம் (பிரம்மா + அண்டம்)

(௫) பிரம்மாவுக்கும் வாழும் காலம், அவர் உலகில் சுமார் நூறு வயது.

(௬) நாமும் ஒரு பிரம்மா. (அஹம் பிரம்மாஸ்மி).

மேலே கண்ட விஷயங்கள் நாம் நமது வாழ்வில் பலமுறை கேட்டது அல்லது படித்தது.

நாம் புதியதாகக் கேட்பது:

(௭) அண்டத்தில் உள்ளதே பிண்டத்தில் உள்ளது.

(௮) பிரம்மாவின் உடலும் நமது உடலும், கோடானுகோடி (நம்மைப் போன்ற) உயிர்களால் உருவானது.

(௯) நமது உடலில் உள்ள கோடானு கோடி உயிர்களுக்கு நாம் ஒரு பிரம்மா. (அஹம் பிரும்மாஸ்மி)

(௧௦) நமது விஞ்ஞானிகள் கண்டு சொல்லி, நாம் ஊகித்து உணர்ந்த நமது அண்டம், பிரம்மாவின் (பிண்டம்) உடல்.

ஏதாவது ஒரு பிரம்மாவுடன் உடனடியாக கைகுலுக்க விரும்பினால், அடுத்து இருக்கும் மனைவியோ, பிள்ளையோ, தாய் தந்தையோ, அடுத்த வீட்டு மனிதரோ – இதில் யார் கிடைத்தாலும் நீங்கள் கை குலுக்கலாம்.

ஆனால், உங்கள் பிரம்மாவுடன் கை குலுக்க, ஆன்மிகப் பயணம் அவசியம்.

இதற்கு என்ன ஆதாரம்? தொடர்ந்து படியுங்கள்.

பிரமனின் பரிமாணங்கள் என்ன?

பிரமனை அடையாளம் காண, அவர் பரிமாணங்களை அறிவது அவசியம்.

நம்மைவிட எவ்வளவு அதிக உயரம், பருமன் என்று தெரிந்து கொள்ளுவோம்.

இந்த பிரமன், அடி அல்லது மீட்டரில் அளக்கக்கூடிய உருவம் இல்லை. கிலோ மீட்டரில் அளக்க முடிந்தாலும் பரவாயில்லை. பிரமன் இன்னமும் அதிக பரிமாணங்கள் கொண்ட ஒருவர்.

பிரமனின் பரிமாணத்தை ஊகிக்கும் ஒரே வழி, நமது நேரத்தோடு பிரமனின் நேரத்தையும் ஒப்பிடுவதே!

நமது நேரத்திற்கும் பிரம்மனின் நேரத்தையும் ஒப்பிட்டு, பிரமன் நம்மைப்போல எத்தனை மடங்கு பெரிய உருவத்தை கொண்டிருக்க வேண்டுமென்று தோராயமாக கணக்கிடலாம்.

நாம் மூச்சு விடுவதில் நான்கு பாகங்கள் இருப்பதை கவனிக்கலாம். (க) மூச்சை உள்ளே இழுப்பது. (உ) இழுத்த மூச்சை நுறையீரலில் (டுதணஞ்ண்) சிறிது நேரம் வைத்திருப்பது, அடுத்து (ங) தேக்கிய மூச்சுக்காற்றை சிறிது சிறிதாக வெளியேற்றுவது. (ச) நுறையீரலை காற்றில்லாமல் காலியாக வைப்பது.

பிரமன் ஒரு சுற்று மூச்சுவிட்டால், நமக்கு ஒரு நான்கு யுகம் முடிந்துவிடும்

கடினமான உடல் உழைப்பு செய்பவர்கள் அதிக ஆரோக்கியத்திற்கு காரணம் அவர்கள் அதிக காற்றை இழுத்து, ஒரளவு ஆழமான மூச்சுவிடும் முறையே என்பதை விஞ்ஞான ரீதியாக நிரூபணமாகியுள்ளது.

உலகம் முழுவதும் மக்கள் யோகா பயிற்சிகளை பின்பற்றுவது இதை நிரூபிக்கிறது.

இந்த நான்கு மூச்சு நிலைகளை பிரம்மனின் மூச்சுடன் நிலைகளுடன் ஒப்பிடும்போது, அதற்கான நேரம், மனித நேரத்தோடு ஒப்பிட்டு பிரமனின் வயதை கணக்கிடுவோம்.

பிரம்மாவும் நாமும், அவரவர் உலகத்திலே, சுமார் கஉ மணி நேரத்தில் க௦௦௦ முறை மூச்சு விடுவதாக கணக்கு. (அ) ச த்ய யுகம் க,எஉஅ,௦௦௦; (ஆ) த்ரேதா யுகம் க,உகூசு,௦௦௦; (இ) த்வாபார யுகம் அசுச,௦௦௦; (ஈ) கலி யுகம் சஙஉ,௦௦௦;

ஒரு யுக—சுற்று என்பது ச யுகங்களை கொண்டது மொத்தம் ச,ஙஉ௦,௦௦௦; வருடங்கள்.

ஒரு கல்ப காலம் = க௦௦௦ ★ சஙஉ௦ ௦௦௦ மனித நாட்கள். ஒரு பிரம்மனின் நாள அதாவது; இரு கல்ப நேரம் பிரமனின் உச மணிநேரம் = உ ★ க௦௦௦ ★ சஙஉ௦௦௦௦

= அ,சுச௦,௦௦௦,௦௦௦ மனித வருடங்கள்.

**யுகங்கள்**

நம் பலர் யுகம் என்ற சொல்லை கேட்டிருக்கிறோம். யுகங்கள் நான்கு.

நாம் மூச்சு விடுவது போலவே, பிரம்மனும் மூச்சு விடுகிறார். காற்றை மூக்கின் வழியே இழுப்பது, இழுத்த காற்றை நுரையீரலில் சில நேரம் தேக்கி வைப்பது. பின்னர் தேக்கிய காற்றை வெளியேற்றுவது. நான்காவதாக, நுரையீரலைசில வினாடிகள் நாம் காலியாக வைத்திருப்பது போலவே, பிரம்மனும் தன் நுரையீரலைக் காலியாக வைத்திருக்கிறார்.

இப்போது, நாம் வாழும் காலத்தை கலியுகம் என்று அறிவோம்.

பிரமனின் வயதை நமது வயதோடு ஒப்பிடுவோம்.

பிரம்மனின் வயதை யுகங்கள் அடிப்படையில், கணக் கிடுவதை தொடங்குவோம்.

இறுதியாக நம் வருடத்தால் பிரமனின் வாழ்நாளைக் கணக்கிடுவோம்.

பிரமனுக்கு க௦௦ வயது. என்றால்,

அ,௬௪௦. ௦௦௦. ௦௦௦ து ௩௬௫ து க௦௦ மனித வருடங்கள்.

பிரமன் எவ்வளவு பெரிய உருவமாக இருக்க வேண்டும்?

எல்லா உயிர்களும் (உயிர் உடலின்) உருவத்தின் அளவுக்கும், அதன் வாழ்நாளுக்கும் ஒரு சம்பந்தம் – ஞிணிணூணுடூச்ஞ்டிணிண × இருப்பதை நாம் உணரலாம். அதை வைத்து, உத்தேசமாக,

பிரமன், மனிதனைப் போல, ௩க௫௩௬௦௦௦௦௦௦௦௦ மடங்கு பெரிய உருவமாக இருக்கலாம்.

வேறு விதமாக சொன்னால், நமது அண்டம் நம்மை விட

௩க௫௩௬௦௦௦௦௦௦௦௦ என்ற அளவிலானது.

அதே கணக்கில், பிரமாண்டம் (அண்டத்தின் அண்டம் அல்லது பிரமனின் அண்டம்) என்பது சுமார் நம்மை விட

௧௧௪௫க௧உ௧௬௦௦௦௦௦௦௦௦௦௦௦௦௦௦௦

அளவு பெரிய பரிமாணங்கள் கொண்ட உருவமாக இருக்கலாம்.

ஒரு மாதியாக பிரமனின் பரிமாணங்களை உணர்ந்தோம்.

## பிரம்மா ஒரு சங்கிலித் தொடரோ?

பிரம்மாவுக்கும் ஒரு பிரம்மா இருக்கலாம். அந்த பிரம்மாவுக்கும் ஒரு பிரம்மா என்றும் சங்கிலித்தொடர் தெரிகிறது. நம் உடலை அதிலிருக்கும் கோடானுகோடிஉயிர்கள் ஒரு அண்டமாகவே உணரும்.

அது மட்டுமில்லை, நம் உடலிலுள்ள ஒரு நுண்ணுயிர் கூட ஒரு

பிரம்மாதான். அந்த பிரம்மாவின் உடலில் கோடிக்கணக்கில் பிரம்மா என்று அடுக்கடுக்காக பல பிரம்மாக்கள் அல்லது அண்டங்கள் இருப்பதை மனதின் கண்ணினால் நான் காண்கிறேன்.

நான் சில உதாரணங்களைத்தர, அதன் உச்தவியுடன் நீங்களும் காணலாம். பல வருடம் முன்னால், ஒரு ஆன்மிக மகான் தன் உடலைக் களைந்து மேற்கொள்ளும் ஒரு பணத்தில் (ச்ண்ஞுணூச்டூ ஞுணூச்திஞுடூ) ஒரு அனுபவத்தை பாடியதில் கீழே கண்ட கருத்து காணப்பட்டது.

பல தமிழ் அறிஞர்களையும் மெய்ஞானிகளையும் இதைப் பாடியமகான் யார் என்று கண்டுபிடிக்கும்படி வேண்டியிருக்கிறேன்.

அணுவுக்குள் சென்றேன் ஏழேழு உலகம் கண்டேன் . . . .

பிரம்மா ஒரு சங்கிலித்தொடராகத்தானிருக்க வேண்டும்.

பல ஞானிகளின் பாடல்களில் ஈரேழு உலகங்கள் இருப்பதாக சொல்லியதை நாம் காணாலாம்.

பிரம்மாண்டம் : திருவள்ளுவர் மிகப் பெரியதாக நினைத்தது, நாம் வாழும் உலகம்தான் என்று நினைக்க இடம் உண்டு. (ஏனென்றால், கல்லாதது உலகளவு என்றார்). தற்கால விஞ்ஞான அறிவில் ஓரளவு அறிந்த நமக்கு, உலகத்தை விட பெரியதாக அண்டம் ஒன்று இருப்பது தெரியும். அந்த அண்டம் உலகத்தைவிட கோடானு கோடி அளவு பெரியது என்று நமக்கு எந்த சந்தேகமும் இல்லாமலே தெரியும். அதைவிட பெரியது எதுவும் நமக்கு தெரியாது. (இண்டர்நெட்டில் ஞ்ணிணிஞ்டூஞு) செய்து, அண்டத்தைப் பற்றி அதிகம் அறிந்து கொள்ளலாமே!) அண்டத்தை விட பெரியது பிரும்மாண்டம். அதாவது அண்டங்களின் அண்டம் பிரம்மாண்டம்.

பிரம்மாண்டம் என்ற சொல்லை, நாம் கேட்டிருப்போம். அது அண்டத்தை விட, மிக மிக மிக .. பெரியது என்று பொருள்பட உபயோகிக்கிறோம். அது என்ன பிரம்மாண்டம் என்று சிந்தித்திருக்கவே மாட்டோம். பிரம்மாண்டம் என்பது நமது பிரமனின் உலகிலே, அண்டம் என்று அழைக்கப்படுவது.

பிரமனின் அண்டம், நமது அண்டத்தை விட கோடானு–கோடி மடங்கு பெரியதாக இருக்க வேண்டும், இல்லையா? நாம் ஒரு அண்டத்தை உணர்வது போல, பிரமன் உலகத்திலும் கோடிக் கணக்கான உலகங்களும், உயிர்களும் இருப்பதை நாம் ஊகிக்க மு டியும், இல்லையா?

மேலே சொன்ன பல விஷயங்களை சில ஆன்மிக நூல்கள் என்று திட்டவட்டமாகச் சொல்லுகின்றன.

நாம் இதை எல்லாம் எப்படி நம்புவது?

நாம் இதற்கான சாட்சியங்களைத் தேடுவோம்.

முக்கியமாக, நாம் யார்? நாம் வாழ்வதால் சில சமயம் மகிழ்ச்சியும் மற்ற சமயங்களில் துக்கம் துயரம் என்று அவதிப்பட்டு, வாழ்விலும் பயந்து சாவிலும் பயந்து – ஐய்யா நிச்சயமாக, நமக்கு ஒரு பயன் இல்லை.

அரிசி கோதுமை காய்கறிகள் இயற்கை வளரவிட்டாலும், மனிதனின் முயற்சியும் இருக்கிறது இல்லையா? ஆனால், மனிதன் தனது வயிற்றை நிரப்பவே உருவாக்குகிறான் என்கிற உண்மையை தாவரங்கள் அறிவதில்லை.

அண்டத்தில் உள்ள அனைத்துமே, வேறு ஏதோ ஒரு உயிரின் ஏதோ ஒரு அவசியத்திற்கு உருவானது.

இறைவனோ இல்லை இயற்கையோ, மாயையோ அல்லது மகேசனோ, ஒரு குறிப்பிட்ட உயிர்களை மாத்திரமே உணர வைப்பதும், மற்ற உயிர்கள் இருப்பதை மறைப்பதைச் செய்கிறார்கள்.

யாருக்கு பயன்? நாம் வாழாவிட்டால் யாருக்கு நஷ்டம்? நாம் கடவுளை பார்க்க முடியுமா? நாம் உணரும் உலகம் பிரமனின் உலகத்தின் ஒரு பாகமாக எப்படி உணரலாம்?

# அத்தியாயம் 13

## மனிதனும் மனதும்

பிரம்மாவை தெரிந்து கொள்ள ஆன்மிகம் உதவும். ஆன்மிகத்தைப் புரிந்து கொள்ள, மனது, மாயை இரண்டையும் சுத்தமாக அறிவது அவசியம். முதலில் மனதை அறிவோம்.

(க) மனதைப் பற்றி கவிஞர்கள் விஞ்ஞானிகள், காதலர்கள், மருத்துவர்கள் என்று படித்தவர்கள், படிக்காதவர் என்றில்லாமல், எல்லோரும் பேசுவார்கள்.

மந்திரி மனது வைத்தால், மெடிக்கல் காலேஜில் சீட்டு கிடைக்கும் என்கிறார்கள்.

தன் மனதை மற்றவரிடம் பறிகொடுத்து விட்டதாக இளம் காதலர்கள் சொவார்கள்.

தன் மகனின் மனதை மாற்றிவிட்ட விட்டதாக பல அம்மாக்களுக்கு மருமகள் மீது கோபம்.

படிக்காமல் ஊர் சுற்றும் மகன், யார் பேச்சையும் கேட்காமால் வீணாமல் போவதைப் பார்த்து, பல தந்தைகள் மனம் நொந்து போனார்கள்.

கணவனின் மனதில் இடம் பிடித்துவிட்டால், அவன் தாய் தந்தையரை விரட்டியடிப்பது சுலபம் என்று மகளுக்கு உபதேசம் செய்தாள் ஒரு தாய். எனவே, மனினுக்கு எல்லாமே மனதுதான். அதை ஆராயும்போது முக்கியமாக அறியவேண்டிது அந்த மனம் இருக்கும் இடம், இயங்கும் விதம். ஏனென்றால், மனதை அறியாமல் ஆன்மிகத்தை அலசு முடியாது.

கண், மூக்கு, நாக்கு, செவி, தோல் (தோலின் தொடு உணர்ச்சி) என்ற ஐம்பொறிகளால் அறிவதில் சில மனத்தை அடைகிறது. மனதின் நுழைவாயிலில் இருப்பது புத்தி.

இதை கம்ப்யூட்டரைப் போல ஒரு இயந்திரமாக கற்பனை செய்து கொள்ளலாம். மனதில் வரும் செய்திகளை புத்தி அசைபோடுகிறது. அதிலிருந்த தேவையான அறிவை மாத்திரம் பிரித்து மனதில் சேர்க்கிறது. தேவை இல்லாதது கழட்டி விடப்பட்டு காற்றில் கரைந்து காணாமல்ப் போகிறது.

தேவையான செய்திகள் மனதின் முதல் கட்டத்தில் அடைய புத்தி அதை அலசி ஆராய்ந்து, எது நன்மை எது தீமை என்பதை பிரித்து மனதின் சேமிப்பில் வைக்கிறது.

மனது என்றால் என்ன?

நமது எண்ணங்களை சேமிக்க பல அடுக்குகளை கொண்ட ஒரு சேமிப்பு.

இந்த சேமிப்புகளோடு இணைந்தது இயங்கும் கம்ப்யூட்டரைப் போல ஒரு சக்தி அதன் பெயர் புத்தி. நமது மனது, இந்த இரண்டும் இணைந்த ஒரு ஏற்பாடு என்று கொள்ளலாம்.

அதில் உயிர்கள் பிறக்கும்போது ஒரு குறைந்த அளவு அறிவைக் கொண்ட சேமிப்போடு வருகின்றன. வாழும் இடம், சுற்றம், அன்றாட அனுபவத்தால் கிடைக்கும் அறிவும் மனதில் சேர்ந்து அதன் உதவியால், உயிர்–உடல்கள் வளர்ந்து நலிந்து மடிகின்றன.

மனிதனின் சுகமோ அல்லது துக்கமோ, லாபமோ அல்லது நஷ்டமோ அதை உணர்வது மனதினால் மட்டுமே! நாம் செயல் படுவது, மனதில் சேமித்து வைத்த அறிவைப் பற்றியிருக்கும்.

க. மனிதன் செயல்படும் போது, விடாமல் புலன்கள் மூலம், செய்திகள் மனதின் தாற்காலிக சேமிப்புக்கு வந்தபடி இருக்கின்றன வந்த செய்திகளை, இந்த தாற்காலிக சே மிப்பிற்கு வருவதில் குறைவந்தால், மனிதனை கவனம் குறைவு என்போம்.

உ. சிலரது புத்தியானது, நன்மை தீமைகளை சரிவர பிரிக்கப் படாமல் அது தாறுமாறாக (மனதின்) சேமிப்பில் இடம் பிடிக்க ஒரு காரணமாகிறது, அதைக் கொண்டு செயல்படுபவரை பித்து பிடித்தவர் அல்லது பைத்தியக்காரன் என்று அறிகிறோம். புத்தி கெட்டவன், அறிவு இல்லாதவன் என்றெல்லாம் சொல்கிறோம்.

ங. மனதின் சேமிப்பின் அளவு குறைந்தால், புதிய செய்திகள் உள்ளே வரும்போது, பழைய செய்திகள் அழிந்து விடுகின்றன. அந்த மனிதரை, மறதி உள்ளவராக அறிகிறோம்.

## உள்–வெளி மனங்கள்

நமக்கு இரண்டு மனது உள்ளதாக நாம் உணரலாம். நாம் சிந்தித்துச் செயல்படுவதற்கு வெளி மனது என்று ஒன்றும், அனிச்சையாக செயல்பட உள் மனது என்று ஒன்றும்.

நாம் அறிவை அடையும் வழிகள்

சிந்தித்துச் செயல்படுவது என்பது, ஒரு சிலருக்கு, அதுவும் சில சமயங்கள் மாத்திரமே மனிதர்களுக்கு இயல்பாகும். ஆனால், சிந்திப்பது ஞானப்பாதையில் உள்ள எல்லா தேடுவோருக்கும், இயல்பாக வரும்.

கல்லாமல், சிந்திக்காமல் செயல்பட, மற்றவரை பின்பற்ற வேண்டும். பிறரின் அறிவில் அடைக்கலம் தேட வேண்டும்.

நம்மில் பேரதிகம் மக்கள், கற்பதோ, சிந்திப்பதையோ மிக

சிறிதளவே கொண்டவர்கள்.

பெரும்பாலும் நாம், அறிவின் துணையில்லாமல், அனிச்சை யாகச் செயல்படுகிறோம்.

வெளி மனதில் நாம் வைத்திருப்பது – நாம் கற்று அறிந்தது சமீபத்தில் கேட்டு, படித்து – நல்லது கெட்டது, பாவபுண்ணியம், கர்மா, நாம் அழியக் கூடிய ஒன்று போன்ற பல உண்மைகள்.

நமது புத்தி சொல்லி நாம் அறிவை சேமித்தால் அதுவும் நம் உள் மனதில் சேரும்.

அப்படி சேர்க்காவிட்டால், அறியாத வயதில் பிறர் சொல்லி நாம் சேகரித்த அறிவு. இனம் தெரியாத பல பயங்கள், சரிபார்க்க முடியாத பல வகை நம்பிக்கைகள் ஆகியவை மாத்திரமே நமது உள்மனதில் தங்கியிருக்கும்.

மாயை, தன் விஷமங்களைச் செய்வதற்கு தேர்ந்தெடுத்த இடம் இந்த உள் மனதாகத்தான் இருக்க வேண்டும்!

பலர் ஒரே வீட்டில் வளர்ந்தாலும், ஒரே கல்வி பெற்றாலும் ஒவ்வொருவரும் வெவ்வேறு விதமாக செயல்படுவது இந்த மனதின் இயக்கம் வேறுபடும் காரணத்தினால் என்று அறியலாம்.

மனநோய்கள் என்பது, சிலர் அறிவுக்கு பொருந்தாத பல நடவடிக்கைகளில் ஈடுபடுவதையும் அவர்கள் உள்மனதின் தங்கியுள்ள தவறான எண்ணங்கள் நம்பிக்கைகள் பயம் ஆகியவற்றில் ஆதாரமாக காணலாம்.

அப்படிப்பட்டவரை. ஆழ்ந்த உறக்கநிலைக்கு (ஞீனுனுணீ ண்டூனுனுணீ) அழைத்துச் சென்று அதை மாற்ற அறிவுறை தந்து (ண்தஞ்ஞ்னுண்ஶுடிணிண) ஓரளவு குணம் காணலாம்.

பொதுவாக சகிக்க முடியாத அளவு செயல்பாடுகளுடன் காணப்படும் பல மனநோயாளிகள் சில சமயங்களில் ச ாதாரணமாக நடந்து கொள்வதை நாம் உணரலாம், இவர்கள் உள்–வெளி மனதுக்கும் மாறிமாறி தாவுவதாக உணரலாம்.

நல்ல மன நிலையில் உள்ளவரும், செயல்பாடுகளுக்கு இடையே இப்படி இரு மனங்களிடையே மாறி மாறி தாவுவது வழக்கமே!

## கம்ப்யூட்டரும் மனதும்

இந்த கால கட்டத்தில் கம்ப்யூட்டரைப் பற்றிய அறிவு மக்க ளுக்கு அதிகம். அதே சமயம் மனிதன் செயல்பாடு பல விதங்களில் கம்ப்யூட்டரை ஒத்திருக்கிறது.

கம்ப்யூட்டரில் காணும் (மெமரி, ஹார்டு டிஸ்க் போன்ற) சில சேமிப்பு உபகரணங்களுடன் மனித மனத்தை ஒப்பிட்டுப் பார்க்கலாமே! வெளி மனம் மெமரியைப் போல விரைவில் அழியும் தன்மை கொண்டது. குறைவான அளவே சேமிக்கமுடியும்.

இதற்கு மாறாக நமது உள் மனம் ஹார்ட் டிஸ்க்போல. விரைவில் அழியாது. அதிகமான செய்திகளை சேகரிக்க முடியும்.

இந்த உள் மனம் பல விதங்களில் சிறப்பானது.

நமது செயல்பாடுகளில் இரு வகை இருப்பதை நாம் அறிவோம். இச்சை செயல், மற்றது அனிச்சைசெயல்கள்.

அனிச்சை செயல்களுக்கு சிந்தனை அவசியம் இல்லை. கொசு நம்மை கடித்தால், நாம் என்ன செய்யலாம் என்று சிந்தனை எதுவும் செய்வதில்லை. கொசு கடித்த செய்தி உள் மனதுக்கு எட்டியதும், கை தானாகவே கொசுவை அடிக்கிறது.

## மனித இயல்புகள் (சுபாவங்கள்)

இச்சை செயல்களுக்கு மனிதன் விழித்த நிலையில் இருப்பது அவசியம். அனிச்சையாக செய்யும் செயல்களை நாம் மனித இயல்புகளாக அறிவோம். பெற்ற கல்வி, படித்த புத்தகங்கள், கேட்ட செய்திகள் சமூக பொருளாதார சூழ்நிலை, வாழ்வில் வெற்றி தோல்விகள், அனுபவங்கள், அதனால் கிடைத்த மன வளர்ச்சி, அறிவு பெறுவதில் ஆர்வம் ஆகிய பல விஷயங்கள் இந்த உள் மனத்தின் இருப்புகளேஒரு மனிதருக்கும் மற்றவருக்கும் உள்ள வேற்றுமையை நிர்ணயம் செய்யும்.

அவரவர் உள்–மனதின் எஞ்சியுள்ள அறிவே ஒருவர் நல்லவராக இருப்பதும் தீயவராக இருப்பதற்கும் காரணங்கள்.

வெளி மனது, புத்தியின் உதவியுடன் சிந்தித்து செயல்படும். சந்தர்ப்பத்தை முன்னிட்டு பொய்கள் பேசலாம். நல்லவரில்லாதவர் மிக நல்லவராக நடிக்கலாம்.

ஆனால் உள் மனது சிந்திக்காமல் செயல்படும். அது மட்டுமல்ல, நமக்கு நிகழவிருக்கும் ஆபத்துகளை தடுக்கக்கூடிய விஷயம், நன்மை தரும் விஷயம், மிகவும் லாபம் தரும் விஷயம், என்பது போன்ற பல விஷயங்கள் (புத்தியின் உதவியுடன்) செயல்பாட்டிற்கு தயார் நிலையில் இருப்பது இங்கே தான்.

இந்த சேமிப்பில் புதிய ஐட்டங்கள் வந்த வண்ணம் இருக்க, அதிகம் பயன்படுத்தாத அயிட்டாங்கள் இந்த சேமிப்பின் மிக அடியில் சேர்ந்து விடுகின்றன. அதை ஆழ்ந்த மனம் எனலாம். இது பழைய பொருள்களை சேர்த்து வைக்கும் கிடங்கைப் போன்றது. இதில் சேர்ந்ததை திரும்பப் பெறுவது சுலபம் இல்லை. ஆனாலும், சில சமயங்களில் நமது சில செயல்பாடுகளுக்கு இதுவே காரணமாக இருக்கிறது.

புத்தியானது, தன்னை கொண்டிருக்கும் மனிதருக்கு எது நல்லது எது தவறு என்று சொல்லித்தருகிறது.

புத்தியின் செயல் திறன், மனிதனின் வெற்றி தோல்வி, வாழும் விதம், தரம் ஆகியவற்றைத் தீர்மானிக்கிறது. அறிவு புத்தி வளரக் காரணமாகிறது.

நாம் அறிவதைத் தாற்காலிகமாக சேமிப்பது. சேமித்ததை தமக்குத் தேவையானது, தேவை இல்லாதது என்று தரம் பிரிப்பது. தேவைப்படும் போது, பிரித்த சேமிப்பிலிருந்து சரியான விடையை தருவது என்ற வேலையையும் செய்வது, இந்த புத்தி.

மனிதன் உறங்கி விட்டால், (புத்தி தாற்காலிகமாக தன் செயல் திறனை இழக்கும்) சிந்தனை உறங்கிடும். ஆனால் மனம் உறங்கிவிட்டாலோ, மனிதன் தன் செயல் திறனை மொத்தமாக இழக்கிறான். சுருக்கமாக சொன்னால், மனிதனின் இயக்கமே மனதின் இயக்கம்தான். உதாரணாமாக, அடுத்து என்ன செய்ய வேண்டும் என்று மனதைக் கேட்கிறோம். இந்த பிரச்ச னைக்கு என்ன பரிகாரம் என்று கேட்கிறோம். நம் மனதுக்கு தெரியாவிட்டால் யாரை கேட்டு தெளிவு பெறலாம் என்று மனதைத்தான் கேட்கிறோம்.

புதியதாக ஒருவரைக் காணும்போது, அவர் நம்மை நோக்கி சிரித்தால், இவரை எப்போதாவது சந்தித்திருக்கிறோமா என்று மனதை விசாரிக்கிறோம்.

நாம் தவறு செய்ததை உணர்த்துவது மனது. வருந்துவது மனது, விரும்புவதும், வெறுப்பதும் மனது. மகிழ்வதும் மனது, வலியை உணர்த்துவது மூளையின் பகுதியாகிய நரம்பு மண்டலம்.

ஆனால் உணர்வதோ, இந்த மனது.

மருத்துவத்தில், அனெஸ்தீஷியா முறையில், சில ரசாயனப் பொருளை செலுத்தினால் உணர்வுகள் உறங்வைக்கிறார்கள்.

அதனால் நமது எந்த உணர்வுகளும் மனதை (புத்தியை)

அடைவதில்லை. ஹிப்னாட்டிசம் என்ற முறையில் உணர்வுகளை தடை செய்யாமல், புத்தியை அந்த உணர்வுகள் அடைந்தாலும், புத்தி அதை உணராமல் செய்கிறார்கள், அறுவை சிகிச்சையில் தோன்றும் வலி எந்த பாதிப்பும் ஏற்படுத்தாதபடி செய்கிறார்கள்.

## பதஞ்சலி யோக சூத்ரா தரும் விளக்கம்

பதஞ்சலி யோக சூத்திரம் என்ற ஒரு நூல். பகவான் கிருஷ்ணனால் எழுதப்பட்டது (சொல்லப்பட்டது) என்று நம்பப்படுகிறது. இதில் மனிதனைப் பற்றி ஒரு விளக்கம் தரப்பட்டுள்ளது (விஞ்ஞானியின் நோக்கில், இது ஒரு மாடல்),நேரடியாக ஆராய்வது கடினம். மாடலை ஆராய்ந்தால், மனிதரை அறியலாம். அதை, இப்போது நம் உதவிக்கு அழைப்போம்.

மனித உடலை ஒரு ரதத்திற்கு ஒப்பிடப்படுகிறது. அதை இழுப்பது ஐந்து குதிரைகள். அதாவது ஐம்பொரிகள் எனப்படும் கண், காது, மூக்கு, நாக்கு மற்றும் தொடு உணர்வு. இந்த ஐந்தும் மனிதனை தன் இஷ்டப்படி அங்கும் இங்கும் கொண்டு செல்கிறது.

உதாரணமாக, இந்த ஓட்டலில் நல்ல ருசியான மசால் தோசை கிடைக்கும் என்று நமது நாக்கு, ஒரு உடுப்பி ஹோட்டலுக்கு நம் உடலை இழுத்துசெல்கிறது.

நாம் எல்லா வேலையையும் விட்டுவிட்டு, ஒரு சினிமா தியேட்டர் முன் நிற்பது எதனால்? இந்த சினிமாவில் குளு குளு காதல் காட்சிகள் காட்டுவதாக காது கேட்க, கண்கள் காணத் துடிக்க, இரண்டுமாக சேர்ந்து செயல்படுவதால் கால்கள் நம்மை தியேட்டருக்கு கொண்டு செல்ல. கையானது பணத்தை எடுத்துத் தர, பணம், நேரம் எல்லாமே பாழ்.

இப்படி நாம் எங்கே போனாலும் என்ன செய்தாலும் அதற்கு இந்த குதிரைகளுக்கு ஒப்பிடப்படும் ஐம்புலன்களே முதல்

காரணம்.

இந்த குதிரைகளுக்குக் கடிவாளம் இட்டு அதன் கயிறைப் பிடித்திருப்பது, புத்தி என்கிற வண்டியோட்டி. குதிரைகளை தங்கள் இஷ்டத்திற்கு அங்கும் இங்கும் வண்டியை இழுத்து செல்வதைக் கட்டுப்படுத்த முடியும்.

இந்த புத்தி என்பது இந்த ஐம்பொரிகள் மூலம் அடைந்த அனுபவங்கள் தொடங்கி, செவி வழி வந்த மற்றவரின் அனுபவங்கள், ஆன்றோர் அறிந்து நமக்கு நூல்கள் மூலம் அறிவித்தது என்ற எல்லா அறிவுகளின் சேமிப்பும்.

இந்த சேமிப்பை, தேவைப்படும் சமயத்தில் இந்த அறிவைப் பயன்படுத்தும் ஒரு இயந்திரம் இரண்டும் இணைந்ததாக நாம் உருவகம் செய்து கொள்ளலாம்.

நல்ல அறிவுகள் சேமிப்பை அடைந்தால் நல்ல புத்தி கிடைக்கும். மனம் புலன்களைக் கட்டுப்படுத்தும். மாறாக, நல்ல அறிவை அடையவில்லை என்றால், புலன்கள் மனதை ஆளும். பல ஆண்டுகள் கழிந்து நம்மை இழுக்கும் குதிரைகள் ஒவ்வொன்றாக செயல் இழக்கலாம்.

அல்லது தவறான புத்தி கொண்டு புலன்களுக்கு மனம் கட்டுப் பட்டு, ரதமாகிய உடலை கரடுமுறடான பாதைகளில் இழுத்துச் செல்ல, ரதம் (மனித உடல்) சேதமடையலாம்.

எப்படியோ, ஒரு நாள், இந்த ரத ஓட்டம், ஓட்டு மொத்தமாக நின்று போகும். ஒரு முக்கிய விஷயத்தை நாம் மறந்துவிட்டோம். ஆமாம் இந்த ரதத்தில் பயணம் செய்வது யார்?

திருவாளர் ஆத்மா அல்லது உயிர்உடல்.அவர் எங்கே போவதற்காக இந்த ரதத்தில் ஏறினார்? எங்குமே போவதற்கு இல்லை.

சும்மா, உள்ளே உட்கார்ந்து கொண்டு வேடிக்கை பார்க்கிறார்.

அவ்வளவுதான். இந்த ரதம் போன போக்கில் செய்யும் அழிவுகளுக்கும், மற்ற எல்லாக் குற்றங்களுக்கும் ஆத்மா, பொருப்பாவாரா?

இல்லவே இல்லை என்கிறது இந்த புத்தகம்.

இந்த ரதம் உடைந்து போனால் ... ???

நம்ம ஊரில் நாம் பயணம் செய்யும் கவர்மெண்ட் பஸ் பிரேக் டௌன் ஆனால், பாசஞ்சரான நாம் என்ன செய்வோம்.

அதைத்தான் திருவாளர் ஆத்மாவும் செய்வார், உடைந்து உட்கார்ந்த ரதத்திலிருந்து உடனே இறங்கி, புதிய ரதம் ஏதேனும் பாசஞ்சர் இல்லாமல் இருக்கும் ஒன்றை தேடுவார்.

கல்லாதவனும் – சிந்திக்காதவனும் வாழ்வில் அவதிபடும் காரணம் – கட்டுப்படுத்தப்படாத புலன்கள் நடத்தும் அராஜகம் தான், அதில், அறிவும்–சிந்தனையும் கொண்டவர் சிலர் மாத்திரம் புலன்களை கட்டுப்பாடு செய்வதில் வெற்றி பெறுவார்கள். அதனால் அந்த மனிதன் அடைவது, நல்ல வாழ்வு, அதே சமயம், ஞானப் பாதை, அருட்பாதை, சித்தராவது எல்லாமே, இந்த குதிரைகளுக்கு ஒரு லகான் போட்டு, கட்டுப்படுத்தி, அவ்வப் போது ரதத்தை நிறுத்தி, இறங்கி ஏறி, தன் இஷ்டப்படி ரதத்தை ஓட்ட புத்தி என்ற தேரோட்டியை தயார் செய்து பயன் படுத்துவார். தேர் பத்திரமாகவும் சேதமில்லாமல் ஓடும்.

மனது எங்கே இருக்கிறது?

மனிதனின் தலையில் மூளை என்று இருப்பதாக அறிவோம். அதில் மனதின் சேமிப்பும் இயக்கமு ம் இருப்பதாக பல காலமாக நம்புகிறோம்.

உலகளவில் அறுவை சிகிச்சைகள் நடத்தும் போது சே கரித்த சில மருத்துவத் துறை செய்திகள் இதை தவறு எனறு நிரூபிக்கின்றன. இவைகளை ஆராய்ந்த பிறகு என் முடிவு

என்ன?

மனிதனின் மனம், மனிதனின் அன்னம கோஷத்தில் – உடல் என்று அறியப்படும் இடத்தில் இல்லை.

உதாரணமாக, மருத்துவ அறுவை சிகிச்சைக்குப் பிறகு சில நோயாளிகள் தந்த விளக்கங்கள், நம்மை சிந்திக்க வைக்கும். இவர்கள் கண்களை மூடி, மயக்க நிலையில் இருந்தாலும், விழித்திருந்து அறுவை சிகித்சையை நேரில் கண்டது (கேட்டது) போல, அறுவை நிபுணர்களின் பேச்சுகளை (தவறுகள் செய்ததாக பேசிக்கொண்டது உள்பட) விவரமாக சொல்கிறார்கள்.

இந்த செய்தி, நமக்கு உணர்த்துவது எதை? மனித உடல் உருப்புகள் மாத்திரமே உணரும் தன்மை உடையவை அல்ல. மனித உடல் அல்லாத பாகம் ஒன்று உணரும் தன்மையையும் உணர்ந்ததை சேமிக்கும் தன்மையையும் பெற்றிருப்பதைத்தான்.

நீண்ட காலமாக, மனிதனின் மனம் இருதயத்தில் இருப்பதாக நினைத்தார்கள். இதனால், இதயம் காதல் சின்னமாக அமைந்தது. மனிதர்கள், தம்மால் கட்டுப்படுத்த முடியாத சில நிலைகளை – உதாரணமாக, நோய்கள், விபத்துகள், சில ரசாயன பொருள்கள் உடலில் சேரும்போது உண் டாகும் உடல்–மன நிலைகளை, ஆன்மிகவாதிகள், யோக ச ாதனைகள், மன கட்டுப்பாடு ஆகியவற்றால் அடைகிறார்கள்.

இந்த விதத்தில் இவர்கள் அமானுஷ்ய சக்திகளாக அடைந்தவராக நாம் உணர்கிறோம். இவர்கள் உணர்ந்து தெரிவித்ததை நாம் ஆராய்ந்தால் நாம் அறியாத சில உண்மைகளை தெரிந்து கொள்ள உதவும்.

## உயிர் – பரிமாணங்கள் – நேரம்

இந்த விஷயம், கொஞ்சம் சிக்கலானது. ஆனால், மனதின்

கண்ணால் பார்த்து பிறகு அதை மனதில் பதியவைத்துக் கொள்ளலாம். மு டியாவிட்டால், இந்த அத்யாயத்தைப் படிப்பதில் அதிக பயன் கிடைக்காது.

இந்த உயிர் அல்லது ஆத்மா என்ற விஷயம் – மின்ச ாரம், கம்ப்யுடர் சாப்ட்வேர், காற்று, போன்ற ஒரு சமாச ாரம் இவைகள் இருப்பதை பார்க்க முடியாது. ஆனால் இருப்பதையோ இல்லாததையோ உணரலாம்.

எல்லா உயிர் வகைகளையும் இயக்குவது இந்த உயிரே. பலவகை உயிரினங்களுக்கும் உருவத்தில் (பரு உடலில்) மிகுந்த வித்யாசம் இருந்தாலும்,அதை இயக்கும் உயிர்களில் எந்த வேறுபாடும் இல்லை.

ஆனால் உயிர் புகுந்த உடலும், அந்த உடல் வாழும் இடமும் எப்படியோ அதைப் பொருத்து உயிர் தன்னை மனிதனாகவோ, செடி, கொடி, மரமாகவோ, மிருகம்–பறவையாகவோ கற்பனை கொள்ள வைக்கிறது.

உதாரணமாக:

மிக்சியில் செலுத்திய மின்சாரம், மின்சார அடுப்பில் கொடுத்த மின்சாரம், டிவியில் செலுத்தும் மின்சாரம், ஏர்கண்டிஷணரில் செலுத்தும் மின்சாரம் ஒன்றேயானாலும் ஒவ்வொன்றிலும் செயல்பாடு வேறுபட்டு இருப்பதில்லையா?

அடுத்ததாக நேரத்தை ஆராயலாம்.

மாயையின் ஆட்சிக்கு உள்பட்டது நேரம்.

உயிருடல்கள் ஒவ்வொன்றின் (க) பரிமாணங்கள் (உயரம், அகலம், பளு) (உ) நேரம் (வினாடி,மணி, வருடம்) , (ங.) வாழ்நாள்.

இந்த மூன்றிற்கும் ஒரு நெருங்கிய உறவு உண்டு. இதை உதாரணத்தால் ஆராயலாமா?

மும்பாய், தில்லி போன்ற நகரங்களில் பலகாலம் வாழ்ந்து விட்டு, ரிடையரான பிறகு ஒரு சிறிய கிராமத்தில் வசிக்க நேர்ந்த சிலர் சொல்வது இதுதான். கிராமத்தில் நேரம் (காலம்) நகராமல் இருக்கும். பொழுது போகாது! கிராமத்தில் (நகரங்களைவிட) அதிக நேரம் அதிகமாக இருப்பதாக உணர்வோம். ஏன்?

நாம் வாழும் இடத்தின் பரிமாணங்கள் மாறியதாலேயே. நம்மைச் சுற்றிலும் ஓட்டங்களின் குறைவால்!

நாம் சிறுவர்களாக இருந்த காலத்தில் வசித்த ஒரு ஊருக்கு ஒரு முறை சென்று வாருங்கள். சிறு வயதில், அதிக தொலைவு என்று நமது மனதில் இருக்கும் ஒரு இடம் மிக அருகில் இருப்பதையும், ஒரு பெரிய கட்டிடம், மிக சிறியதாக இருப்பதையும் இன்று உணரவாம். இது எதனால்?

உருவ மாற்றத்தோடு பரிமாணங்களும் மாறுவதால்தான்.

## அத்யாயம் 14

# எல்லாமே அறிவுதான் !

மெய்ஞானம் – விஞ்ஞானம் இந்த இரண்டிற்கும் ஆதாரம், அறிவு !

முன்னுறை:

நமக்கு அறிவு என்பது பற்றி ஒரு மாதிரியான ஐடியா உண்டு. ஆனால் முழுமையாகத் தெரியாது.

தேர்வுகளில், குறைந்த மார்க்கு வாங்கிய சிறுவர்களை பெற்றோர்கள் அறிவில்லாதர்கள் என்பார்கள். தவறுகள் செய்து மாட்டிக் கொண்டாலும் அறிவில்லை என்போம்.

அலுவலகத்தில், நிறைய லஞ்சம் வாங்காத அலுவலரின் மனைவியும், தன் கணவனை அறிவில்லாதவனாகச் செ ால்லுவாள். கல்விக் கூடங்களில் தங்காதவர்களுக்கு அறிவு இருப்பதாக நம்மில் பலர் நம்புவதில்லை.

பட்டம் பெற்றவர்களை அறிவின் சிகரமாக உணருவோம். ஆனால், எது அறிவு, எது அறிவு இல்லை என்பதை மாத்திரம் சரியாகச் சொல்ல பலருக்குத் தெரியாது.

### மூன்று விதமான அறிவு.

அறிவு என்றால் என்ன? எது அறிவு? எது அறிவில்லை?

இதை தமிழ் நூல்கள் தரும் விளக்கம் போல தெளிவான ஒன்றை வேறு எந்த மொழியிலும், நான் படித்ததில்லை.

பொதுவாக அறிவை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

(அ) அறிந்தது, (ஆ) அறிந்த கொள்ளமுடியும் ஆனால் அறியாதது. மூன்றாவதாக – (இ) அறிந்து கொள்ளவே முடியாதது. (என்றாவது ஒரு கொசுவுக்கு, நமது நாட்டின் பிரதமர் யார் என்று தெரிந்து கொள்ள முடியுமா?)

இந்த ஞானிகளும், விஞ்ஞானிகளும் தேடிக் கொண்டிருப்பது இரண்டாம், மூன்றாம் வகை அறிவையே.

விஞ்ஞான வளர்ச்சி, விண்வெளி பயணங்கள் ஆகியவைகளால் நமது இரண்டாம் வகை அறிவு அதிகரித்து வருகிறது. மைக்ராஸ்கோப் டெலஸ்கோப் ஆகிய உபகரணங்கள் தன் பங்குக்கு நமது புலன்களின் அறியும் தன்மையை விரிவாக்கினாலும், நாம் அறிய முடிந்தது மிகக் குறைவே.

கம்ப்யூட்டர்களோ, மனிதனின் செயல் திறன் தனது சக்திக்கு நிகரில்லை என்று சவால் விடுகிறது.

அஉ லட்சம் உயிர்வகை இருப்பதாக கீழை நாட்டு ஞானிகள் சொல்கிறார்கள். அதில் நாம் அப்படி ஒன்றும் வி.ஐ.பி உயிர்கள் இல்லை. நமதளவு அறிவில்லாத உயிர்கள் கோடிக்கணக்கில் உண்டென்றால், நம்மைவிட அறிவில் அதிகமான உயிர் வகைகளும் அத்தனை இருக்கவேண்டும் என்பதை சிலர் அறிந்திருக்க வாய்ப்புகள் உண்டு.

இந்த எண்ணிக்கை நாம் இருக்கும் இந்த பூமியில் மாத்திரமா? அல்லது அகில அண்டத்திலா?

நம்மால் உணரமுடிந்தது, அதிகமாகப்போனால் சில ஆயிரம் இருக்குமா?

இந்த அழகில், மனிதர்களாகிய நாம் மட்டும் தான் உலகத்திலுள்ள ஜீவராசிகளில் மிகவும் புத்திசாலி என்று எண்ணம் வேறு. அடுத்த பிரமோஷனில் கடவுள் ஆகிவிடுவோம் என்ற கற்பனை வேறு. இந்த உலகத்தை கடவுள் மனிதனின் மகிழ்ச்சிக்காக உருவாக்கினார் என்று

கற்பனைக்கும். மனிதனுக்கு மட்டும் ஆறு அறிவாம், விலங்குகளுக்கு ஐந்தே அறிவுதானாம்.

தாவரங்களுக்கு அறிவே இல்லை என நம்பும் மக்களுக்கு, வங்க விஞ்ஞானி ஜே சி போஸ் அவர்களின் ஆராய்ச்சி முடிவுகள் தெரிந்திருக்க நியாயம் இல்லை. மனிதனின் எண்ண அலைகளை பிடித்து அதை புரிந்து கொண்டு செயல்படும் அறிவு தாவரங்களுக்கு இருப்பதுதான் அது.

ஒரு மனிதனுக்கு அடுத்துள்ள மனிதன் பேசுவதைக் கூட புரிந்து கொள்ள முடியாத சந்தர்ப்பங்களே அதிகம்.

மற்ற உயிர்களை விட மனித உயிர் மேலானது என்பது ஒரு தவறான எண்ணம் என்பது கற்றுணர்ந்த சிலருக்காவது தெரியும்.

## இரண்டாம் மூன்றாம் வகை அறிவுகள்

பல ஞானிகள், பல கால கட்டங்களில் தாம் அறிந்த, உணர்ந்த பல உண்மைகளை பாடல்களாகள், கவிதைகள், கட்டுரைகள், போன்ற எண்ணற்ற நூல்களை விட்டுச் சென்றிருக்கிறார்கள். வேதங்கள், உபநிஷதுக்கள் என்று தொடங்கி, எல்லா இந்திய மொழிகளிலும் எண்ணற்ற அறிவு தரும் செய்திகளும், இந்தியா முழுவதும் கொட்டிக்கிடக்கின்றன.

சிவனடியார்களின் எழுத்துக்களில், கடவுளைக் கழற்றிவிட் டால், விஞ்ஞானம் வெளியே வரும்.

சித்தர்கள் பாடல்களில் பொதுவிஞ்ஞானம் மட்டுமல்ல மருத்துவமும் மின்னும்.

நம்மில் கிட்டதட்ட எல்லோருமே நமது எண்ணங்கள், சிந்தனைகள் எல்லாமே மனித உடலில் மூளையில் இருப்பதாக நினைத்து வருகிறோம்.

அறிவில் மிக குறைந்தவர்கள் ஏழைகளாகிறார்கள்

சில ஆயிரம் ஆண்டுகள் முன்னால் வாழ்ந்த சீன ஞானிகளின் கண்டுபிடிப்பு இதுதான்.

உலகம் முழுவதும், பெரும்பாலான மக்கள் ஏழைகள். ஏழைகள் அறிவைத் தேடுவதில்லை. மிகச் சிலரே அறிவைத் தேடுகிறார்கள்.

அறிவைத் தேடியவர் சிந்திக்கப்பழகாவிட்டால் கற்றதெல்லாம் வீணே!

கல்லதவர் சிந்தித்தால், அவருக்கும் அவரைச் ச ார்ந்தவருக்கும் ஆபத்து.

இங்கே சிந்திப்பது என்பது சிறிது மாறுதலாக உபயோகிக்கப்படுகிறது. தான் கற்றவற்றைக் கொண்டு, தனது நலனுக்கு பயன் படுத்துதல். தான் ஏமாற்றப்படாமல், தோல்விகளைத் தழுவாமல் இருக்க, கற்றதை பயன் படுத்த வேண்டும்.

சுய சிந்தனை எதுவும் இல்லாமல், மற்றவர் அறிவில் நாம் சிந்தித்தால் (செயல்பட்டால்)நாம் ஏழ்மையை, தோல்விகளை, இழப்புகளைத் தழுவுவது தவறாது.

## இதில், இரண்டு உண்மைகள் உண்டு.

முதல் உண்மை. ஏழைகள் அறிவைத் தேடுவதில்லை. உணவைத் தேடவே நேரம் போதாத போது, அறிவைத் தேடுவது எப்போது? அப்படி அறிவு அவர்களை அடைந்தாலும் அதை சேமிப்பதில்லை. சேமித்ததையும் பயன் படுத்துவதில்லை.

இரண்டாவது உண்மை. அறிவில் குறைந்தவர்கள் (எத்தனை குறைவோ அவ்வளவு) ஏழைகளாக, பின் தங்கியவர்களாக,

வளர்வதை நாம் அறிவோம்.

### மனிதர்களில், கால் நடைகள்

அறிவில் மிக மிகக் குறைந்தால், மனிதர்கள், (உருவங்களைத் தவிர, மற்ற எல்லா விதத்திலும்) கால் நடைகளுக்கு சமமாக வாழ்வார்கள். கால் நடைகள் கசாப்புக்காரரை பின்பற்றுவதைப் போல, தன் அறிவில் வாழாமல், எவரையேனும் (கண் மூடித்தனமாக) பின் பற்றி வாழ்வதை வழக்கமாக கொள்கிறார்கள். இவர்கள் என்றுமே அடிமைகளாக, தன் உழைப்பைக் குறைந்த விலைக்கு அளித்து ஏழ்மை நிலையில் வாழ்ந்து மடிகிறார்கள்.

### அறிவைத் தேடும் மக்கள்.

அறிவதில் ஆர்வம் உள்ளவர்கள் எல்லோருமே மற்றவர்களிடமிருந்து வித்தியாசமானவர்கள். அடிமைத்தனத்தை வெறுப்பவர்கள், ஏமாறற்றங்களை தாங்கமாட்டார்கள்.

ஏழ்மையை இவர்கள் விரும்பி ஏற்றுகோள்வார்கள். அதன் மறு பெயர் எளிமை. அதனால் ஏழ்மை இவர்களை வாட்டுவதில்லை.

சிலர் வளமான வாழ்வை விரும்புவார்கள். தனக்கு கிடைத்த அதிகாரம் செல்வாக்கு ஆகியவற்றை எளியோருக்கு பயன்படச் செய்வார்கள்.

இவர்களை ஏழ்மையும் இயற்கையும் என்றுமே வாட்டுவதில்லை. இந்த சிலரே கற்பது – கற்றதை சிந்திப்பது – சிந்தித்ததை சேமிப்பது என்ற மூன்று–பாகம் கொண்ட அறியும் முறையை பின்பற்றுகிறார்கள்.

இவர்களே தாங்கள் மட்டுமில்லாமல் தங்களை

அண்டியவர்களும், பிள்ளைகளுக்கும் நல்ல கல்வி, மற்றும் அறிவைத் தருவதில் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை விட தமது சந்ததிகள் அதிக அறிவை அடைவதில் தீவிரமானவர்கள் அதில் அதிக அறிவை அடைந்தவரை ஞானிகள் என்போம். இவர்களை ஏழ்மை துரத்துவதில்லை.

## அருளைத் தேடுவோர்

இவர்கள் வளமையை ஒதுக்கிவிட்டு ஏழ்மையைத் துரத்திப்பிடிக்கிறார்கள் என்று சொல்லுவது பொருந்தும். கடவுள் உண்மை என்று எதை எதையோ தேடத் துவங்கி இரண்டாம், மூன்றாம் வகை அறிவை அடையும் மக்கள்.

## அறிவின் குறைவு ஆண்டவனின் கட்டளையோ?

அண்டம் இயங்க அறிவை அதிகம் அடையாத மக்கள் அதிகமாகவும், அறிவை வெவ்வேறு அளவுகளில் அடைந்த மக்கள் குறைவாகவும் தேவை.

இப்படிப்பட்ட தேவைகள் எப்படி நிறைவேறுகின்றன?

இந்த மாதிரியான கேள்விகளுக்கு எல்லையே இல்லை. சுருக்கமாக மாயை என்று ஒரு பெயர் வைத்து, எல்லாப் பழியையும் அதன் மேல் சுமர்த்தலாம். மாயையை அடுத்ததாக அலசலாம்.

# அத்தியாயம் 15

## மாயை.

### மாயா – ஒரு அறிமுகம்

ஒரு மாறுதலுக்காக, இந்த அத்யாயததை, கேள்வி பதிலாக ஆரம்பிப்போம்.

கேள்வி – மனிதர்களின் துன்பத்திற்கு காரணம் மாயை என்று சொல்லப் படுகிறதே ! அப்படியானால் மாயையை உருவாக்கியது யார்? மயையை உருவாகியது கடவுள் என்றால், கடவுள் ஒரு சாடிஸ்ட்டா?

பதில் – யார் உருவாக்கினார்கள் என்ற கேள்வியை விட, மாயை இருப்பதை நாம் உணருவது எப்படி? ஏன் உருவானது? அதன் தாக்கத்திலிருந்து தப்புவது எப்படி? இந்த கேள்விகள் நியாயமானது.

நிச்சயமாக எவரையும் துன்பப்படுத்தும் எண்ணத்துடன் எதுவும் உருவாக்கப்படுவதில்லை. இந்தக் கண்ணுக்கு தெரியாத, மாயா என்ற சமாச்சாரம், மனிதனை துரத்துவதாகச் சொல்லாத ஞானிகள் இல்லை. இது மனம் சம்பந்தமான சமாச்சாரம். எனவே மனதை முதலில் ஆராயலாம்.

கேள்வி : மாயை மனிதனை கட்டுப்படுத்துவது எப்படி?

பதில் : உள் மனது என்று இருப்பதையும் அது எப்படி மனிதன் அனிச்சையாக செயல்பட வைக்கிறது என்று பார்த்தோம் இல்லையா?

நம் எல்லா உயிரிலும் அதனதன் உள் மனத்திலே, பல, ஓரே விதமான, பல பொய்கள் வசிக்கின்றன. இவைகள் பொய் என்று வெளி மனதிற்கு தெரியும். உள் மனது தன்னிச்சை

யாக, (அனிச்சையாக) செயல்படுவதால் வெளி மனது உண்மையை அறிந்திருந்தும், பயன் ஏதுமில்லை.

இவற்றில் முக்கியமான பொய்கள்:

க. நாம் மரணம் இல்லாதவர்கள், என்றும் நிலைத்திருப்பவர்கள் என்பது போன்ற எண்ணம்.

நாம் எல்லை இல்லாமல் சொத்து சேர்ப்பது, பிறருடன் பகை கொள்வது, நமது நாட்டில் பிறந்த மக்களை ஏமாற்றி, பட்டினி போட்டு வெளிநாட்டு வங்கியில் கோடி கோடியாகப் பணம் சேர்ப்பது – போன்ற எல்லா செயல்களுக்கும் அடிப்படை இந்த மாயைநமது உள் மனதிலே விதைத்த பொய்களே.

உ. விடாத மரண பயம். உயிர் வாழ, பொருள் மிக மிக அவசியமானது என்ற எண்ணம், பொருள் இல்லாவிட்டால், மரணம் நம்மை விழுங்கிவிடும் என்ற பயம்.

ங. காதல், நண்பர்கள் இரண்டுமே வாழ்வில் தவிர்க்க இயலாதது. மற்றும் முக்கியமானது என்ற எண்ணம்.

பொதுவாக, நமது வாழ்வில் அடிக்கடி சந்திக்கும் சூழ்நிலை, நாம் பல முறை அனுபவித்த மிகவும் நல்ல மற்றும் மிகவும் மோசமான அனுபவங்களின் படிவங்கள் நமது உள் மனதில் சேருகிறது.

நமது வெளி மனதில் தங்குவது, முற்றிலும் புதிய அனுபவங்களும், மிக குறைந்த அளவில் மாத்திரமே நாம் பெற்ற அனுபங்களும் மாத்திரம். அதுவும், புதிய அனுபவங்கள் நம்மை அடையும்போது, மறைந்து விடுகின்றன.

மாயையானது, ஏழை, பணக்காரர், அறிவுள்ளவர், இல்லாதவர் என்ற வித்யாசமில்லாமல், மேலே குறிப்பிட்ட மூன்று பொய்களை தவறாமல் எல்லா மனிதரின் உள் மனதிலும் இடம் பெறவைக்கிறது.

அதிக அறிவுள்ள மனிதர்களான ஞானிகளை, இந்த பொய்கள் சிறிதும் பாதிப்பதில்லை. ஏனென்றால், அவர்கள் அடைந்த அறிவு, மாயை உருவாக்கிய பொய்கள் நிரம்பிய உள் மனதைக் காலி செய்கிறது. காலியான உள் மனதை, அவர்கள் பாடுபட்டு அடைந்த அதே அறிவால்நிரப்ப, ஞானிகள் நம்மைவிட – சிந்தனை, செயல், வாழ்க்கையின் குறிக்கோள் என்று – எல்லாவிதங்களிலும் வேறுபடுகிறார்கள்.

மாயை, அறிவுள்ள மக்களை குறைவாகவும் அறிவில் குறைவுள்ள வரை அதிகமாகவே பாதித்துவிடுகிறது.

## மாயை போடும் திரை

இதே போன்ற கண்களால் காணமு டியாதவைகளை மனக ண்களால் (மனதில் உருவகம் செயது கொள்ள) காண முயற்சி செய்வது மிகவும் அவசியம்.

வெளி மனதின் சேமிக்கும் வசதி உள் மனதின் சேமிப்பைவிடக் குறைவு. புதிய அனுபவங்கள் வரும்போது வெளிமனதிலுள்ள பல அனுபங்கள் அழிகின்றன. அதனால், வெளி மனதில் சே மித்தது அதிக நாள் நிலைத்தும் இருப்பதில்லை என்கிறோம். அரசியல் பிரமு கர்கள் அளித்த வாக்குறுதிகளை நாம் மறந்து விடுகிறோம்.

கடந்த காலத்தில் பிளேடுகம்பெனிகள் மக்களின் சே மிப்புகளை விழுங்கிய கதைகளை, வெளி நாட்டில் வே வலை வாங்கித்தருவதாக ஏமாற்றிய ஏஜெண்டுகள் பற்றிய செய்திகள், அடைந்த ஏமாற்றங்கள் மற்றும் தோால்விகள் எல்லாமே வெளி மனதில் தங்கிய சில நாட்களில் காற்றில் கரைந்து விடுகின்றன.

அறிவுள்ளவர்கள் அல்லது ஞானிகளின் தன்மை (அல்லது சக்தி) வெளி மனதில் அடைந்த செய்திகளை சாரத்தைப் பிரித்து உள்மனதில் பத்திரமாக செர்ப்பதே!

அப்படி சேர்த்தவரை, அனிச்சையாக செயல்பட்டாலும் என்றுமே தோல்விகள் தொடராது, வாழ்வில் ஏமாற்றங்கள் நிகழாது, வாழ்க்கையின் குறிக்கோள்கள் மாறுபடும்.

## சிந்தித்துச் செயல்படுவது மிகவும் சிலரே!

நாம் பெரும்பாலான சமயங்களில் உள் மனதின் துணையுடனே வாழ்கிறோம். ஆகவே உள் மனது மனிதனின் செயல்களை கட்டுப்படுத்துகிறது.

மாயை கொடுத்த பொய்கள் உள் மனதிலே இருக்கின்றன சில நிகழ்சிகளும் காட்சிகளும் – முக்கியமாக – இறப்பு, அல்லது ஒரு மிக கொடூரமான விபத்து, தீவிர நோய், அழிவுகள், மனதை கலக்கும் வகையான உடல் ஊனமான தோற்றங்கள் – மனிதனின் வெளிமனதில் சில நாட்கள் தங்கி, மனிதரின் செயல்பாடுகளை, அந்த சில காலத்திற்கு நல்லவிதமாக மாற்றுகின்றன. இந்தக் காட்சிகள் எவருக்குமே புதியதில்லை. என்றாலும் நம் மனதில் நிலைத்து இருப்பதில்லை இல்லையா?

இந்த நிகழ்வை ஆராய்ந்து பார்த்தால், சில மனதை உலுக்கும் சில காட்சிகள் நம் செயல்பாடுகளை உள் மனதின் கட்டுப் பாட்டிலிருந்து சிறிது காலம் விலக்கி, வெளிமனதின் கட்டுப்பாட்டில் கொண்டு வருகிறது என்று உணரலாம்.

இந்த மனமாற்றத்தை, மாயையானது சாதாரணமாக, உண்மைகளை மனதிலிலிருந்து மறைத்தே இருக்கும் தன் திரையை, சிறிது விலக்கிக் கொள்வதாக சொல்லப்படுகிறது.

## மனித வாழ்வில் மாயையின் பொய்கள் இன்றியமையாதது

மாயை உருவாக்கிய பொய்கள் மனிதனின் உள் மனதில் இடம் பெறவில்லையானால், மனிதன் செயல்பாடு நின்றுவிடும், அதனால் ஓட்டங்கள் நின்றுவிடும். அதோடு,

இந்த அண்டமும் அழிந்துவிடும். இந்த விதமாகவும் நாம் மாயையை விளக்கலாம். வேறுவிதமாகவும் இந்த மாயையை அணுகலாம்.

## மாயையும் – அறிவு – சேமிப்பது.

மனிதருக்கு, இயற்கையாகவே அறியும் திறனில் குறைவு வருவது ஒருபக்கம் இருக்க, அறிந்ததை சேமிப்பதில் அவ்வப்போது, (நினைவில் கொள்ள) குறைவு வருவதையும் மாயை செய்யும் வேலையின் விளைவாக கொள்ளலாம். விளைவு ஒன்றுதானே?

இந்த நினைவாற்றலின் குறைவு, அறிவில் குறைவாகவும் பலர் நினைக்க இடம் உண்டுஇல்லையா?

## அண்டமும் – மாயையும்.

புத்தியை ஒரு கம்ப்யூட்டராக கற்பனை செய்து பார்த்தோம்.

இப்போது மாயையையும் ஒரு கம்ப்யூட்டராக நினைத்துப் பார்ப்போம்.

பிரமன் என்ற இந்த அண்டம் ஒரு கம்ப்யூட்டர் என்றால், இதைஇயக்க மாயை என்ற (சக்தியும்) சாப்ட்வேரையும் அவரிடம் உள்ளது என்று கொள்ளலாம்.

மாயை ஒரு சக்தி. இந்த. மாயை, அகில அண்டம் இயங்க உருவானது. மனிதனை துன்புறுத்துவது அதன் நோக்கம் இல்லை. மனிதனின் துயரங்கள் என்பது மாயை தன் வேலையை செய்யும் போது, தவிற்கமு டியாத ஒரு உப–விளைவு. அவ்வளவுதான்.

எதற்காக இந்த இறைவன் நம்மை படைத்து, அதோடு மாயையையும் படைத்து நம்மை படுத்துகிறான் என்று பக்தர்கள் கேட்பதுண்டு. மனிதனை மையமாக வைத்து அலசினால், மனிதன் பொருள் உலகில் அவதிப்படுவது –

மாயையினால் என்ற மு டிவு சரியாக தோன்றும்.

அதை விட்டு, பெரிய அண்டத்தை மையமாக வைத்து பார்த்தாலோ! இந்த எண்ணம் தவறு என்பது புரியும். திரையிட்ட மனதினால், மனிதன் அதிவேகமாக செயல்படுகிறான். அழிவை நோக்கி போகிறான் அவன் வேக த்தை அவ்வப்போது குறைக்க வேண்டும். இல்லாவிட்டால் அழிந்திடுவான். இதற்கு ஒரு இடைவேளை, தேவை. மாயை தன் திரையை விலக்குவது, அல்லது மனதிலிருந்து சில காலம் மறைந்திருந்ததை மீண்டும் நினைவில் கொண்டு வருவது.

மறந்த அல்லது மறைந்த அந்த அறிவை அல்லது உண்மையை மீண்டும் வெளிமனதில் சேமிக்கிறது (மாயை?!). சில காலம் சென்ற பிறகு, உண்மை மீண்டும் மறையும். இந்த கால–கட்டத்தில் மனிதன் வித்தியாசமாகச் செயல்படுகிறான்.

நாம் அறிந்ததை, சேமித்ததை மனதிலிருந்து குறைந்த காலத்திலேயே மறையும் தன்மையையே, உண்மையை மாயை திரையிட்டு நம்மிடமிருந்து மறைப்பத்தாக நாம் உணர்கிறோம்.

## மாயை பிரமனுக்கு அவசியம்

இந்து மதத்தில்–சக்தியை, மஹாமாயே என்று கூவி வணங்குவதை – குறிப்படுவதை கவனியுங்கள். ஏனென்றால் மாயையின் வேலை, பிரம்மனுக்கு, இறுதியாக, நம்மை படைத்த இறைவனுக்குத் தேவை.

கேள்வி – ஞானிகள் மாயையின் பிடியிலிருந்து விலகியவர்கள். ஞானிகளால் பயன் பெருவதுயார்?

பதில் – மாயா, ஒரு அலோபதி மருந்துபோல.

குறிப்பாக, வலியை குறைக்கத் தின்னும் இந்த வகை மருந்துகள், நிச்சயமாக சில மணி நேரங்கள்வரை வலியைப் போக்கும். ஆனால், அதன் உபவிளைவு, புதியதாக, வயிற்றில் உபாதைகளைத் தொடங்கும். கொலஸ்ட்ரால் என்ற வியாதிக்குத் தரப்படும் மருந்து கிட்னியைப் பாதிக்கும் என்று அறிகிறோம்.

அதே போல மனிதனை ஓட—ஆடவைக்க மாயை செய்யும் வேலை, மனிதனை பலவகை துன்பத்தில் தள்ளுவதை உணர்கிறோம். மனிதன் துன்பத்தில் மாட்டினால் ஓடவேண்டிய ஓட்டம் தடைபடும். மனிதன் உண்மையை உணர்ந்தாலும் மனித செயல்பாடு நின்றுவிடும். பிரமன் கோபம் கொள்வார். அதற்காக, அடிபட்ட மனிதனின் மனக்காயம் ஆறி, மீண்டும் நன்றாக ஓட, ஒரு உத்தி தேவை.

ஞானியே ஒரு மாயையின் படைப்புதானே! மாயையால் (திரையை மு ழுவதும் விலக்கி ) உருவாகிய உயிர்தாே ன? சாதாரண மனிதரின் வலியைப் போக்கி திரும்பவும் செயலாக்கத்திற்கு உதவ இந்த ஞானிகள் உதவுகிறார்கள். இதற்காகவே, மாயை, ஞானிகளை உருவாக்கியது.

இந்த ஞானிகளின் வேலை மருந்து வேலை செய்வது போலத்தான். ஞானிகள் மக்களை சமாதானம் செய்து பல அறிவுறைகளையும், ஆறுதல்களையும் அள்ளித்தந்து, நாளையும் கோளையும் குறை சொல்லி மந்திரமும் எந்திரமும் தந்து மக்களின் மனக்காயங்களை ஆற்ற, வலி ஆறிய மக்கள் மீண்டும் புத்துணர்ச்சியுடன் ஓடத்தொடங்குகிறார்கள்.

## மாயைவிலகிய மகாகவி

மகாகவி சுப்பிரமணிய பாரதியை, சிந்தனையாளராக, தேசீய கவியாக, ஏழையின் நண்பனாக, குழந்தைகளின் கவியாக, ஜாதிகளை ஒழிக்க பாடுபட்டவராக பெண்விடுதலைக்கு குரல் கொடுத்தவராக, பல கோணங்களில் நாம் அறிவோம்.

நான் பல காலம் அறியாதது, பாரதியை ஒரு யோகியாக, மாயை கலைந்தவராக. இதை பாரதி என்ற அவரை பற்றிய ஒரு திரைப் படத்தில் ஒரு பாடல் மூலம் அறியலாம். நானும் பாரதியார் பாடல்கள் என்ற சில புத்தகத்தகங்களில் தேடோ தேடோ என்று தேடியும் இந்தப் பாடல் கிடைக்கவில்லை.

இந்த பாடலின் முதல் வரி: நிற்பதுவே, நடப்பதுவே, பறப்பதுவே ! நீ நிஜம் தானோ?

சுப்பிரமணிய பாரதி, ஆன்மிகவாதியாக மாறும் நேரத்தில், மற்ற ஆன்மீகவாதிகள் எல்லோருக்கும் வந்த இதே சந்தேக த்தை அடைந்து அதை பாட்டாகவும் பாடிவிட்டார்.

நாம் காண்பது எல்லாமே கனவு மயக்கங்களோ? !

உண்மையைத் தேட கணக்கில்லாத மனிதர்கள் இடைவிடாது கிளம்பிக் கொண்டே இருக்கிறார்கள். அப்படியானால் நாம் காண்பது எல்லாமே கனவோ? நாம் அறிவது எல்லாமே பொய்யோ?

அப்படியும் சொல்வதற்கில்லை. உண்மை என்பது ஒன்றில்லை. உண்மைகள் கணக்கில் அடங்காதவை. நாம் உணர்வது மாத்திரம் ஒரு சில மட்டுமே.

நாம் காண்பது எல்லாமே பொய் என்பது சரியல்ல. ஆனால் உணர்வது மாத்திரமே உண்மை என்பதுதான் பொய்.

நாம் புலனாலும், அறிவாலும் உண்மையின் ஒரு சில முகங்களை மாத்திரமே உணர மு டிகிறது. உள்ள எல்லா மு கங்களையும் இல்லை. ஆனால், நாம் புலன்களால் அறிவது மட்டுமே உண்மை. அதைத் தவிர வேறு எதுவுமே இல்லை என்ற எண்ணம் மட்டுமே பொய்.

நாம் அறியாத மற்றும் நம்மால் அறியமு டியாத பல உண்மைகள் உள்ளன. ஞானிகளும் விஞ்ஞானிகளும் தேடுவது நாம்

அறியாத, அறியமு டியாத அந்த உண்மைகளைத்தான்.

இந்த கட்டத்தில், இதுவரை நாம் அறிந்ததைக் கொண்டு, அறியாததை த் தேடிப்பார்க்கலாம். இது தர்க்க சாத்திர அடிப்படை மட்டுமில்லை. மாறாக எல்லா விஞ்ஞான ஆராய்ச்சியாளர்களின் அனுகு முறையின் அடிப்படையும்தான்.

குறிபிட்ட சிலர் – அறிவியல் நிபுணர், யோகி. அதிகம் படித்தவர், நாலும் தெரிந்தவர்கள் இவர்கள் சாதாரண மக்க ளைவிட அதிகப்படியாக அறிந்ததுதான் என்ன?

## மாயையை ஏன் கம்ப்யூட்டர் என்கிறோம்?.

லாஜிக்கலாக சிந்தித்தால், நம்மை மீறிய ஒரு சக்தி நம்மை ஆட்டி வைப்பதாக பெரியவர்கள் சொல்லி நாம் கேட்டிருக்கிறோம் இல்லையா?

இது உண்மையாக இருக்க வாய்ப்பு உள்ளது, ஆனால் வழக்கமாக கடவுளை மனித உருவில் தயாரித்து, அதற்கு உபரியாக நான்கு கை பத்து தலை போன்ற அதிகப்படி உதிரி பாகங்களுடன் காட்சியளிப்பது அல்ல..

பெரிய ரசாயன, உலோக தொழில் சாலைகளின் இயந்திரங்கள் ஒரு காலத்தில், மனிதரின் நேரடிக் கட்டுப்பாட்டில் இருந்தது. தற்போதைய இயந்திரங்கள் என்னவோ பெரும்பாலும் கம்ப்பூட்டரின் உதவியோடு எலக்ட்ரானிக் சாதனங்களை வைத்து உருவாக்கிய கருவிகளால் கட்டுபடுத்தப்படுகிறது.

இதைப்போல, இந்த நம்மை மீறிய சக்தியும், தற்போதய நிலமையை அனுசரித்து எத்தனை பொருள் உலக மக்கள் வேண்டும், எத்தனை அருள் உலக மக்கள் அவசியம் என்று கணக்கிட்டு, அதன்படி சில பொருள் உலக மக்களை அருள் உலகத்திற்கு தள்ளலாம் என்று கணக்கிட்டு செயல்பட வாய்ப்பு உண்டு.

இந்த பெரிய சக்திக்கு நம்மைப் போல ஒரு தனிப்பட்ட மனிதர், அல்லது ஆத்மா என்றெல்லாம் அக்கரையோ அல்லது கவலை படுவதற்கோ நியாயம் இல்லை. குறிபிட்ட நேரத்தில், மக்கள் ரகங்களில் தேவையான கலவை இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ளும். குறைவிருந்தால், ஒரு கண்ட்ரோல், அதிகமானால் வேறு ஒரு கண்ட்ரோல் சிக்னல்களை பிரப்பித்து சமநிலைக்கு கொண்டுவரும்.

## அத்தியாயம் 16

## ஒரு கதை.

## மாயை விலகினால் என்னவாகும்?

### மாயை விலகின மனிதன் எப்படி இருப்பான்?

இப்போது வேறு ஒரு கதை. இதில் கதாநாயகன் சரியான கல்லுளி மங்கன் என்பார்களே, அப்படி ஒரு ஆள்.

அவன் பெற்றோருக்கு, ஒரே மகன். எல்லா தாய்—தந்தையரையும் போல தன் மகனையும் மற்ற மனிதர்களைப் போலவே வேலைவெட்டி, குடும்பம் பிள்ளை குட்டி என்று வாழ்வதை கண்டு களித்துவிட்டு நிம்மதியாக கண்ணைமூடக் கனவு கண்டார்கள். (இது மாயை விதைத்த ஏக்கம்)

சோம்பேரியாகத் திரிந்து வந்த தன் மகனுக்கு புத்தி சொல்ல ஒரு படித்த அனுபவமிக்க உறவினரை அணுகினார்கள். ஒரு படித்தவர் ஒப்புக்கொண்டார்.

ஒரு நாள், அந்த பெரியவர், தறுலை என்று தெரிந்தவர்களால் பெயர் கொடுக்கப்பட்ட, அந்த இளைஞனை கண்டார். அந்த இளைஞனிடம் தன்னை ஒரு உறவினர் என்று அறிமுகப்படுத்திக் கொண்டு, மெதுவாக ஒரு பேச்சு வார்தையைத் தொடங்கினார்.

பெரியவர் எதிர்பாராத வகையில், இந்த இளைஞன் பணிவுடன் நின்று, கேட்ட கேள்விகளுக்கு நன்றாகவே பதில் சொன்னான். பெரியவர் மகிழ்ந்தார். வந்த காரியம், விரைவில் நலமாக நடந்தேரும் என்று நம்பிக்கை. அதில் தோன்றிய மகிழ்சியுடன் தொடர்ந்தார்.

இவ்வளவு விவரம் தெரிந்த இளைஞனான நீ, ஒரு வேலை—வெட்டி தேடிக் கொண்டாலோ, என்றார் பெரியவர். 'தேடிக் கொண்டேன், அடுத்து என்ன செய்யவேண்டும்? என்று பதிலளித்தான் இளைஞன், பணிவாக.

பெரியவர் மகிழ்ந்தார். அடுத்ததாக கல்யாணம்—கார்த்திகை என்று செய்து கொள் என்றார் பெரியவர்.

நீங்கள் சுட்டிக் காட்டிய பெண்ணையே மணக்கிறேன், அடுத்து என்ன செய்ய உத்தரவிடுவீர்களோ? என்ற கேள்வியோடு பெரியவரைப் பார்த்தான் இளைஞன்.

பெரியவர், மனம் நெகிழ்ந்தார். பிள்ளை—குட்டி பெற்றுக்கொள் என்றார்.

அதைத் தொடர்ந்த இளைஞன், அடுத்து என்னவோ என்றான். 'குழந்தைகளை வளர்த்து பெரியதாக்கி, தன் காலில் நிற்கச் செய் ' என்றார். தொடர்ந்து அவர்களுக்கு கல்யாணம் கார்த்திகை நடத்து என்று முடித்தார்.

'அடுத்து என்னவோ '? என்றான் இளைஞன்.

சற்றே யோசித்து, அவ்வளவுதான். 'இப்போது நிம்மதியாக இளைப்பாறு, என்று பெரியவர் முடித்தார்.

' பெரியவரே, என்று தொடர்ந்தான் இளைஞன். 'நிம்மதியாக இளைப்பாறுவது தான் வாழ்வின் லட்சியமென்றால், அதைத்தானே இப்போதும் நான் செய்கிறேன். நடுவில், திருமணம் – பிள்ளை குட்டி பெற்று, பல அல்லல்களை சந்தித்து பிறகு இளைப் பாறுவானேன்?

'இப்பொழுது நான் இளைப்பாரிக் கொண்டிருப்பதில் என்ன தவறு இருக்கிறது ' என்றான், இந்த புத்திசாலி இளைஞன்.

வாயடைத்துப் போனார் பெரியவர்.

ஒரு விதத்தில் இந்த இளைஞனை மாயை தன் வலையில் சிக்க வைக்க இயலவில்லை. அதனால், பெரியவரை உபயோகித்தது. பெரியவரும் இந்த முயற்சியிலும் தோற்க, இறுதியாக தோற்றது என்னவோ மாயைதான்.

இது எப்படிப்பட்ட சக்தி, எதற்காக என்பதை ஒரு குத்து மதிப்பாக உணரலாம். இல்லை உளரலாம். இல்லை கற்பனை செய்து பார்க்கலாம்.

# அத்தியாயம் 17

# பிரம்மாவும் நாமும்

ஞானிகளுக்கும் விஞ்ஞானிகளுக்கும் வேறு ஒரு ஒற்றுமை உண்டு.

இந்த இரண்டுவகை மக்கள் பேசுவதைப் புரிந்து கொள்வது அவ்வளவு சுலபம் இல்லை!

இந்த இரண்டு வகை மக்கள் எழுதியதை அல்லது சொல்லுவதைப் புரிந்து கொள்ள அவர்கள் அறிந்ததில் சிறிதளவாவது நமக்கு தெரிந்து இருப்பது அவசியம். அவர்கள் அறிந்ததை எல்லாமே அவர்கள் சொல்லத் தலைப்பட்டாலும், ஞானிகளும் – விஞ் ஞானிகளும் சொல்வது என்னவோ புரிவது போல இருந்தாலும், புரியாது.

அப்படிப்பட்ட அறிவை அடைந்திருக்காவிட்டால் கூட பரவாயில்லை. ஞானிகளே அவர்கள் சொல்வதை நம்மால் புரிந்து கொள்வது சுலபமல்ல என்று நாம் ஒரு மாதிரியாக ஊகித்து அறியும் விதத்தில் உதாரணங்களோடு சொல்லியிருக்கலாம். பதாஞ்சலி யோக சூத்ரா, அப்படிப்பட்ட ஒரு புத்தகம்.

இப்படி சொன்னால் பொதும். மக்களுக்கு புரியும் என்று தப்புக்கணக்கு போட்டுவிட்டார்களோ. இல்லை உண்மையைச் சொன்னால் நம்பமாட்டார்கள் என்ற பயமோ?

**ஞானிகள் சரியாக சொல்லவில்லை! என்பதற்கு நல்ல உதாரணம் பல இருந்தாலும் இங்கே ஒன்றே ஒன்று. கேள்வி: கடவுள் எங்கே?**

கடவுள் எங்கே என்ற கேள்விக்குப் பல பதில்கள் பெரியவர்கள் பல காலமாகச் சோல்லி, நாம் கேட்டிருக்கிறோம். நினைவு படுத்திப் பாருங்கள்.

(ஆகாயத்தைக் காட்டி) மேலே இருப்பதாக சொல்வார்கள்.

இறைவன் இல்லாத இடமே இல்லை என்றார்கள்.

தூணிலும், துரும்பிலும்கூட இருப்பதாக சொன்னார்கள்.

இதெல்லாம், நம்மைக் குழப்புவது போதாதென்று, நாமே கடவுள் அல்லது பிரம்மா என்றார்கள்.

தெளிவாக சொல்லியிருந்தால், மனிதனே,

★ அண்டத்திலுள்ள உயிர்கள் எல்லாமே பிரம்மவின் பாகங்கள். நமது அண்டம்தான் நமது பிரம்மா.

உதாரணத்துடன் சொன்னால், ஒரு ஸ்கூட்டரை மெக்கானிக் பிரித்துப் போடுகிறார். பிரித்தவுடன் அதில் பல வித அளவுகளில், வண்ணங்களில் உலோகத்தாலான, பிளாஸ்டிக் கினால் செய்யப்பட்ட பல நூறு பாகங்கள் காணப்படும். பிரித்துப்போட்ட பின் ஸ்கூட்டர் மறைகிறது. பாகங்கள் ஒவ்வொன்றும் தனிப் பெயர் பெறுகிறது.

நாம் நமது கடவுளைத் தேடுவது, ஸ்கூட்டரில் உள்ள ஒரு பாகம் ஸ்கூட்டரை அறிய முயல்வதைப் போலத்தான்.

★ நமது உடல் என்று கருதுவதும் ஒரு அண்டம்தான். அதனுள்ளே பல லட்சம் அல்லது பல கோடி உயிர்கள், நம்மைப் போலவே பிறவி–இறப்பு என்ற சுழலில் சிக்கியுள்ளன. ஸ்கூட்டர் உதாரணத்தில், மொத்தமாக ஸ்கூட்டருக்கும் வாழ்நாள் இவ்வளவு என்று வரையரை உண்டு. அதன் பாகங்களுக்கு அதிலும் குறைந்த அளவில் வாழ் நாள் உண்டு.

★ உயிர்களுக்கு மறுபிறவி இருப்பது போலவே, அண்டத் தில் மறு பிறவி எடுக்காத உயிர்கள் எதுவும் இல்லை. நமது கண்களின் முன்னே தினமும் நடந்தேறும் – ரீ–சைக்ளிங். சில உலோக பாகங்களை, அதன் பயனுள்ள வாழ்நாள் முடிந்தபின்,

அவற்றை உருக்கி மீண்டும் வேறு ஒரு பொருள்களை உருவாக்குவதை உதாரணமாகக் கொள்ளலாம். புதிய பொருளுக்கு பெயர் பயன்பாடு எல்லாமே மாறுகிறது, இல்லையா?

பிரம்மாக்களில், பல அடுக்குகளை உணருங்கள்:

நமது பிரம்மாவின் உடலில் நாம் என்ன வேலை செய்கிறோம்?

நமக்கு இதற்கான பதிலை நேரடியாக கண்டு கேட்டு சொல்ல யாருமில்லை. ஒரு மாதிரியாக சில ஞானிகள் அறிந்து செ ன்னார்கள். நாம் கார்லோஸ் காஸ்டிநேடா தனது நவோஹோ பழங்குடி மக்கள் மத்தியில் உதித்த டான் ஹுவான் என்ற ஞானியின் மாணவராக இருந்து கேட்டு, உணர்ந்த அறிந்து எழுதிய புத்தகங்களில் கண்டது உண்மையானால். (அது உண்மையாக இருக்க அதிக வாய்ப்பு உள்ளது).

## நம் உயிரும் பேருயிரும்

தனியாக, ஒரு மனிதனோ அல்லது வேறு எந்த உயிரும் நமது பேருயிருக்கு ( பிரம்மாவுக்கு ) இன்றியமையாத ஒன்றாகச் சொல்ல முடியாது. ஆனால் கூட்டமாக, சமுதாயமாக நாம், நமது பேருயிருக்கு ஒரு முக்கியமான ஒரு வேலையை செய்து கொண்டிருக்கிறோம்.

வேறு ஒரு உதாரணத்தைப் பார்க்கலாம். பல்லாயிரக்கணகான தொழிலாளிகள் வேலை செய்யும் ஒரு மிகப் பெரியதொரு தொழிற்சாலையில் ஒரு குப்பை கூட்டும் தொழிலாளி செய்யும் வேலைக்கும், தொழில் நிறுவனம் உற்பத்தி செய்யும் பொருளுக்கும் தொடர்பு இல்லாமல் இருக்கலாம். ஆனால் அவர் பங்கும் மறைமுகமாக இருப்பது மறுக்கமுடியாது. அதே சமயம், உருவாக்கிய பொருளில் அந்தத் தொழிலாளியின் பங்கைப் பிரித்துக்காட்ட முடியாது.

சுருக்கமாக நமது உயிர்கள், நமது பரிமாணத்திலிருந்து உணரும் அறிவும் அனுபவமும் நமது பேருயிருக்குத் தேவை.

*இது குறித்து, ஷாமண் முனிவர்கள் சொல்வது :*

ஒரு பெரும் பருந்து இருக்கிறது – அது, நம் கண்களால் கண்டு உணரமுடியாத அளவு பெரியது. அந்த பருந்துக்கு, நாம் இறந்த உடன், நமது உயிரில் அடங்கியுள்ள செய்திகளே பருந்துக்கு விருந்து. அறிவை (செய்திகளை) மாத்திரம் உறிஞ்சிவிட்டு உயிரை வெளியேற்றுவதாக அறிகிறார்.

இதை நமது உடலோடு ஒப்பிட்டுப் பார்த்தால், நாம் நமது பேருயிரின் நரம்பு மண்டலத்திலிருந்து செய்திகளை தலைச் சோறு எனப்படும், மூளைக்கு கொண்டு செல்வதற்காக உருவாக்கப்பட்ட பெரிய குடும்பமாக உணரலாம்.

நமது கலாச்சாரத்தின் அடிப்படையில், ஒரு குடும்பத்தில் ஒருவர் இறந்தால், கருட புராணம் படிப்பது வழக்கம்.

கருட புராணத்தில், நாம் வாழும் காலத்தில் செய்யும் தவறுகளுக்கு தண்டனைகள் விளக்கப்பட்டுள்ளதாக அறிகிறோம்.

இங்கே கீழைநாட்டு ஞானிகள் தெரிவித்ததும், நவாஹோ பழங்குடிகளின் அறிந்ததிலும் ஏதோ ஒரு ஒற்றுமை தெரிகிறது அல்லவா?

## மாயை உறங்கினால் அண்டம் அழிந்திடும். ஏன்?

தெரிந்தவர்கள் சொல்கிறார்கள். மாயை எல்லா உயிர்களுக்கும் விலகிவிட்டால், உலகம் மட்டுமல்ல பிரபஞ்சமே அழிந்துவிடும்.

ஒரு சிறிய கற்பனை – மாயை விலகியால், மனிதர்கள் யாரும் தவறே செய்யமாட்டார்கள் . நினைத்துப் பாருங்கள்.

எத்தனை அரசாங்க உத்யோகங்கள் காலியாகிவிடும். போலீஸ் சட்டம் ஒழுங்கு பூட்டு, கதவு செய்யும் தொழில்களும் காணாமல் போய்விடும். கோர்ட்டு வழக்கறிஞர்கள், அவர்களில் உதவியாளர்கள், சிறைச்சாலைகள், அதன் அதிகாரிகள் அனைவருக்கும் வேலை இல்லை. சினிமா, டிவி சானல், செய்திச் சானல்களுக்குக் கதவடைப்பு. தலைவர்கள், அடியாட்கள், கூலிப்படை எதுவுமே தேவை இல்லை.

படிப்படியாக மிருகங்கள் போல வாழ்க்கை முறை மாறிவிடும். அவரவர் உழைப்பில், சொந்த பலத்தில் வாழ்ந்து மடிவோம்.

முக்கியமாக, இந்த காதல் பிசினஸ். இந்த பெண் (காதலி) அல்லது இந்த ஆண் (காதலன்) நமது வாழ்வில் மகிழ்ச்சி தருவான் (ள்) என்ற எண்ணமே ஒரு மாயை செய்யும் விஷமம் தானே? செய்தித்தாளை படித்து, செய்தி சானல்களில் கணவன்–மனைவிகளை கண்டு, நம் வீட்டிலேயே பிரச்ச னைகளைப் பார்த்த பின்னும் மனிதனுக்கு காதல் எப்படி வரலாம்?

மாயை உள்ள வாழ்க்கை நமக்குக் துக்கம் தந்தாலும், மகிழ்ச்சியும் தருகிறது. துக்கமும், மகிழ்ச்சியும் மாயையின் வேலைகள்தான். மாயை இல்லாத வாழ்க்கையை நினைத்துப் பாருங்கள். மசாலாக்கள் இல்லாத சினிமா போல. ஆர்ட் பிலிம்ஸ் கூட சில சமயம் விறு விறுப்பாக இருக்கும். அவ்வளாவு போர்!

தாற்காலிகமாக விலகும் மாயை. ஒரு உண்மை னிகழ்ச்சி

என்னுடன் நட்புடன் பழகிய ஒரு அரசாங்க அதிகாரி. என்னிடமும் மற்ற நண்பர்களிடமும், மிகவும் நேர்மையானவராக ஒரு முகமூடி அணிந்து கொண்டே வருவார். போகப் போக, நண்பர் சிலர் உண்மை முகத்தைக் காண, தாம் செய்வது சிறிய தவறுகள் என்றும் அவைகள் அந்த சூழ்நிலையின் கட்டாயம் என்று நண்பர்களை நம்ப

வைத்திருந்தார்.

ஒரு சமயம் அவரைப் போன்றே லஞ்ச ஊழலில் பெயர் போன அவரது உதவியாளர், மிகவும் ஆரோக்கியமாக இருந்தவர், வயதில் க சிறியவர், திடீரென்று மரணம் அடைந்தார்.

இந்த மரணம், நண்பரை அதிகம் பாதித்தது போலும். மாயை என்ற திரை விலகியதை நாங்கள் உணர்ந்தோம்.

அப்போதிலிருந்து சில நாட்களுக்கு தான் என்ன நேர்ந்தாலும் நேர்மையாகவே வாழப் போவதாக பல முறை எல்லா நண்பர்களிடமும் கூறிவந்தார்.

ஒரு மாதம் கூட முழுவதும் முடியும் முன், விட்டிருந்த பழைய வழக்கத்தை சிறிது சிறிதாக தொடர்ந்தார். செய்ய வேண்டிய வேலைக்கு லஞ்சம் – அலுவலக வேலையில் மோசடி என்று முழு அளவில் அவர் திருப்பணி தொடங்கிவிட்டது என்று நண்பர்கள் எல்லாருக்கும் தெரியவந்தது.

அவர், அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, தவறுகள் செய்வதை நிறுத்தவே இல்லை.

## மாயையும் மனிதரும்

மாயை நமக்கு தலைவலியை உண்டாக்கலாம். ஆனால் அண்டத்திற்கு மாயையின் சேவை மிகவும் அவசியம்.

ஆகவே மாயை மொத்தமாக இருக்கவே கூடாது என்பதும் தவறு. நாம் வீட்டிற்கு ஜன்னலும் வைத்து அதில் திரையும் பொருத்துவது ஏன்? வெளிச்சமும் காற்றும் பல சமயங்களில் அவசியம், சில சமயங்களில் அவசியம் இல்லை அப்பப்போது கட்டுப்படுத்த அவசியம். இல்லையா? நாம் மாயையையும் திரைச் சீலைக்குத் தானே ஒப்பிடுகிறோம். கணக்கு சரிதானே?

மாயைக்கு மேலும் நான்கு வேலைகள்

இப்போது மாயையை விளக்கமாக அலசுவோம். மாயையின் வேலையை நான்காகப் பிரிப்போம்.

க. மாயையின் முதல் தான் கட்டுப்படுத்தும் உயிர்களை அதன் பரிமாணத்திற்குச் சரியான (ஏற்ற) ஒரு நேரத்துக்குள் தள்ளுவது. (தியானங்கள் போன்ற பயிற்சிகள், ஞானியை மாயையின் இந்த முதல் பிடியிலிருந்து விடுவிக்கிறது). இதிலிருந்து விலகினால், பல பரிமாணங்களில்,நம்மால் அறிய முடியாத பல உயிர்களைக் காணலாம்.

உ. மாயையின் இரண்டாவது வேலை – பிறந்த மனிதர்களை ஒரு குறிபிட்ட வாழ்க்கை வட்டத்துள் வரவழத்து தான் வளர்ந்து, சந்ததிகளை உருவாக்குவதும் அவர்களை வளர்ப்பது, பிறகு அவர்களையும் அதே வாழ்க்கை வட்டத்தில் நுழைப்பது, பின்வளர்ந்து, நலிந்து, முடிவில் இறப்பது என்ற நியதியை உருவாக்கி, அதை பராமரிப்பதே.

ந. மாயையின் மூன்றாவது வேலை – ஞானிகளை தயார் செய்வதே.

பொதுவாக நம் வாழ்க்கை, வலி நிறைந்தது. அவ்வப்போது வலி தாங்காத மனிதர்கள் ஸ்ட்ரைக் செய்ய முனைவார்கள். அவர்களின் மனக்காயங்களுக்கு மருந்து போட்டு, திரும்பவும் வாழ்க்கை வட்டத்தில் வரவழைப்பது ஒரு முக்கியமான வேலை.

இதற்கு ஒரு மனமருத்துவர் கூட்டம் தேவை இல்லையா? ஞானிகள் செய்யும் சில வேலைகளில் முக்கியமானது இந்த ஒரு வேலை.

தப்பிக்க முயற்சி செய்யும் மனிதர்களில் சிலரை ஞானிகளாக தயார் செய்வதுதான் மாயை செய்யும் மூன்றாவது வேலை.

ச. மாயை செய்யும் நான்காவது வேலை – அண்டத்தில் இத்தனை வகை உயிர்கள் அவைகள் ஒவ்வொன்றிலும் இத்தனை உயிர்கள் இருக்கவேண்டும் ஒரு இலக்கு இருக்கவேண்டும்.

ஒவ்வொரு, சூழ்நிலையில் சில விதமான உயிர்கள் அதிகமாகவும், மற்றவை அளவில் குறைவாகவும் இருக்க வேண்டும். பேருயிர் உறங்கும் போதும், இளைப்பாரும் போதும் குறைந்த உயிருடல்களும், ஓடும்போதும், கடுமையான உழைப்பின்போதும் அதிக உயிர் உடல்கள் அவசியம்.

பேருயிரின் அங்க அசைவுகள், மற்றும் தேவைகளை அனுச ரித்து நால்வகை மக்களும் அவர்களின் எண்ணிக்கையும் கூடியும் குறைந்தும் இருக்கும். ஒவ்வோரு வகையிலும் இத்தனை தேவை என்று இருக்க வேண்டும்.

அதிகமோ குறைவோ அண்டத்திற்கு ஆகாது போலிருக்கிறது.

இதற்கு ஒரு கண்ட்ரோல் கருவி அவசியம். இந்த கண்ட்ரோல் (கட்டுப்பாடு) கம்ப்யூட்டரைப் போல இயங்க வேண்டும்.

நான்காம் தர மக்களை கட்டுப்படுத்த:

உலகில அதிக்கப்படியான மக்கள், அறிவில் குறைந்த நாலாம் தர மக்கள்.

இவர்கள் சிந்தனைகளிலும் குறைந்தவர்கள். ஆனால் குறைே வு இல்லாமல் பிள்ளை பெறுவார்கள். வசதியான வளமான வாழ்க்கை தேடாமல், அதற்கு ஒரு அவசியம் இல்லாமல் ஒரு கடின வாழ்க்கை வட்டத்தில் வாழ்ந்து மடிவார்கள். அதிலிருந்து வெளியே வருவதற்கு சான்ஸ் குறைவு.

பிரமனுக்கு இவர்கள்தான் அதிகம் தேவைப்படும்

போலிருக்கிறது.

இவர்கள் கூட்டம் அதிகமாகும் போது, கூட்டத்தை கட்டுப்படுத்த வெள்ளம், பஞ்சம், சுனாமி, இயற்கைச் சீற்றம், கள்ளச்சாராயம், ஜாதி – மத – இன, கலவரங்கள் போதுமானது.

மாயைக்கு, இதே ஏழைகளை அதிக அளவில் எண்ணிக்கையை குறைக்க, இரண்டு நாடுகளிடையே ஒரு போர் போதுமானது. ஒரு போர் உண்டாக, ஒரு நாட்டின் தலைவரின் தலையில் இலேசாகக் கீறிவிட்டால் போதும் சில லட்சம் மக்கள் காலி.

ஒரு மத – இன – ஜாதி – மொழிக் கலவரம். ஒரு தலைவரின் தலையில் மாயை ஒரு தட்டு தட்ட சில நூறுபேர் காலி.

இதெல்லாமே போதாதென்றால், வெள்ளம், வரட்சி, வெய்யில், மழை, புயல், ரயில் விமான விபத்து. கள்ளச் ச ாராயம் இவைகள் என்றும் அழிவதில்லை.

இவைகள் மாயாவின் ஆட்சியில் உள்ளவை. இது வரை கள்ளச் சாராயத்தால் எத்தனை ஆயிரம் ஏழைகள் இறந்திருப்பார்கள். ஒருவருக்காவது கொலைக் குற்றத்திற்கான தண்டனை கிடைத்திருக்குமா?

முதல் மற்றும் இரண்டம் தர மக்கள் பெருக்கத்தை கண்ட்ரோல், அல்லது கட்டுப்பாடு செய்வது மிகவும் எளிது. இவர்கள் அதிகமாக பிள்ளைகள் பெறுவதில்லை. தொட்டதற்கெல்லாம் தற்கொலை செய்து கொள்வார்கள். அதனால் பெரிய அளவில் வெளியிருந்து எந்தக் கட்டுப்பாட்டிற்கும் அவசியமில்லை.

மூன்றாம் தர மக்களோ, முதல் இரண்டு தர மக்கள் ஒரு புறம் இழுக்க, நான்காம் தர மக்கள் மறுபக்கத்தில் நசுக்க தானாக ஒரு கட்டுப்பாட்டில் வந்து விடுவார்கள்.

இப்படி ஒவ்வொரு உயிருக்கும் ஒரு கண்ட்ரோல் வைப்பது மாயையின் வேலை. சுய கட்டுப்பாடுள்ள சில உயிர்கள் நாம் பல பிராணிகளை பற்றி படிக்கும்போது, கீழே கண்டதை அறிகிறோம்.

இயற்கையிலேயே, சுய கட்டுப்புடன் வாழும் சில உயிர்கள்:

ஆஸ்ரேலிய கடற்கரையில் (ஒரு காலத்தில்) ஒவ்வொரு ஆண்டும் திமிங்கிலங்கள் கரையில் ஒதுங்கி இறக்கும். இது ஒரு விதமான தற்கொலை. பெருகும் திமிங்கிலங்கள், தேவையான உணவு

கிடைக்காது போனால், தங்கள் இனமே அழிந்துவிடும் என்று தானாகவே தன் இனத்தை கட்டுப்படுத்திக் கொள்வதாக ஆராய்ச்சியாளர்கள் செய்த மு டிவு.

அதே போல, கண்டம்விட்டுக் கண்டம் பறக்கும் பறவைகள். தனது இனத்தைச் சேர்ந்த நடுவயது பறவைகளை (இனப்பெருக்கம் செய்யத் தகுதியானவைகளை) விட் டுவிட்டு, இளம் மற்றும், முதிய பறவைகள் மாத்திரம் கண்டம் விட்டு கண்டம் பறப்பதை அறிந்துள்ளார்கள். ஒவ்வொரு முறையும் பல ஆயிரம் பறக்கத் தொடங்கி சில நூறுகளே வந்து சேருமாம்.

இதுவும் தானாகவே தன் இனத்தை கட்டுப் படுத்திக்கொள்ள இயற்கை அல்லது மாயை செய்யும் உத்தி.

## மாயை எதற்காக உயிர்களின் பிறப்பையும் பிறகு அவற்றின் அழிவையும் உருவாக்குகிறது?

முதலில், உயிர்கள் பிறப்பதும் அழிவதும் மனிதனின் வச திக்காக் இல்லை. மாறாக, படைத்த பிரம்மாவுக்காக என்பதை மனதில் இருத்தி, சிந்தியுங்கள்.. மனித உடலையும் பிரமனின் உடலையும், ஒரு பன்னாட்டு நிறுவனமாக பாருங்கள்.

நம் நாட்டில், ஒரு நிறுவனம் லாபத்தில் நடக்காவிட்

டாலும், இட்ட முதல் கரைந்த பின்னாலும் கடனில் ஓட்டி, கதவடைக்கும் போது, கதவைத் திறக்கும் சந்தர்ப்பமே இல்லாமல் செய்திடுவோம்.

வளர்ந்த நாடுகளில் நிறுவனங்களை, ஒரு உயிராக மதிக்கிறார்கள். நிறுவனம் உயிரோடும், பலமாகவும் இருந்தால், தொழிலாளிகளும் பொதுமக்களும் பயன் அடைவார்கள், இல்லையா?

பன்னாட்டு நிறுவனங்கள், ஆட்கள் அவசியம் இல்லாத நாட் களில், அல்லது தொழிலாளிகளுக்கு வேலை குறைந்தால், ஆள் குறைப்பு செய்வதும், தேவைப்படும் நேரத்தில் புதியதாக ஆள் எடுப்பது இன்று, நமக்கு நன்றாகவே தெரியும். செய்யாத வேலைக்கு செலவு செய்தாலும், அதிக உற்பத்தி தேவையுள்ள போது தொழிலாளர்களை அமர்த்தாவிட்டாலும் நிறுவனம் நலிந்துவிடும்.

அதேபோல, நாம் அசையும்போதும், வேலை செய்யும்போதும், நம்மில் உள்ள சிறிய உயிர்கள் அதிகமாக தேவை. நாம் உறங்கும் போது அவ்வளவு அதிகம் தேவை இல்லை.

மனிதனுக்கும், நாம் அறியும் பலவகை உயிர்களும் அழியும் போது, பிரம்மா ரெஸ்ட் எடுக்கிறார் என்று நினைக்கலாம்.

ஒரு புறம் அழிகள் நடைந்தேரும் போது, மறுபுறம், புதிய உயிர்கள் தடையில்லாமல் உருவாகிக் கொண்டிருப்பதை கவனிக்க வேண்டும். மிகப் பெரிய பளுவும், அதிக பரிமாணங்களுடன் தயாரிக்கப்பட்ட, புதிய விமானங்களில் டைனமிக் ஈக்குவலிபிருயம் எனப்படும் தத்துவம், இப்படிப்பட்டது.

நம்மை ஒரு இருட்டில் அடைத்து நம்மை தன் இஷ்டம்போல இயக்குவது மாயை. ஆனால் நமது இயக்கத்தால் பயன் அடைவது என்னவோ, பிரம்மா.. இதை பல ஞானிகள் சந்தேகமில்லாமல் அறிந்திருக்கிறார்கள். அவர் அறிந்ததை

தங்களால் இயன்றவரை நமக்கு தெரிவிக்க முயற்சி செய்திருக்கிறார்கள்.

# அத்தியாயம் 18

## நாம் யோகிகளாக மாற ஒரு குறுக்கு வழி

### முன்னுரை

யோகிகளுடைய சக்திகளை ஒரு மாதிரியாக புரிந்து கொண்டோம். யோகிகளாக மாறுவது அவ்வளவு கடினம் இல்லை என்றாலும் சில கால உழைப்பு தேவைப்படும் இல்லையா?

அப்படிப்பட்ட உழைப்பிற்குப் பிறகு ஆதாயம் என்ன என்று தேடுவது மனித இயல்பு இல்லையா?

அஷ்ட சித்திகள் என்னும் சக்தி மாத்திரம் கிடைத்தால், நம் உலகில் விரும்புவது எல்லாமே பெறலாம்.

மனிதனை பயமுறுத்தும் மரணத்தை எட்டி உதைக்கலாம்.

பிறர் கண்ணுக்கு தெரியாமல் வாழலாம்.

கண் இமைக்கும் நேரத்தில் நினைத்த இடத்தை அடையலாம்.

அடுத்த பிறவி என்னவாயிருக்கவேண்டும் என முடிவு செய்யலாம்.

இந்தப் பிறவியில் கிடைத்த அனுபவங்கள் அடுத்தடுத்த பிறவிகளிலும் மறக்காமல் இருக்கும்.

விரும்பியதை அடையும் சக்தி கிடைக்கும். அதோடு எதையுமே விரும்பாத பக்குவமும் சேர்ந்தே வரும்.

இதெல்லாம் ஒரு புறம் இருக்க, ஞானிகள், தங்களுக்குக்

கிடைத்த அஷ்டசித்திகள் எனப்படும், மிக உயர்ந்த சக்தியை எப்படி பயன் படுத்துகிறார்கள்?

ஒன்றை மாத்திரம் உறுதியாகச் சொல்லலாம். இதை வைத்துப் பொன், பொருள், பதவி என்று மாத்திரம் தேடி அலைய வாய்பில்லை. அப்படியானால், அப்படிப்பட்ட சக்தி கிடைத்து என்ன பயன் என்று பலர் கேட்கலாம்.

விளக்கமான பதில் : நாம் சிறுவர்களாக இருந்தபோது வசித்த ஊரிலிருந்து வெளியேறி, பல வருடங்கள் கழிந்தபின் வளர்ந்து, வாலிபராக, முதியவராக திரும்பி வரும்போது:

மிகத்தொலைவிலுள்ளதாக நம் மனதில் இருந்த இடம், மிக அருகில் உள்ளதாக உணர்வோம். அதேபோல, மிக உயரமான கட்டிடங்கள் இப்போது சிறியதாகக் காணப்படும். சிறுவராக இருந்தபோது மிகவும் விரும்பிய ஒரு பொருள் வளர்ந்த பின் ஒரு அற்பப் பொருளாகத் தோன்றும். வளரும் போது நம் தேவைகளும் மாறிவரும், இல்லையா?

சுருக்கமாக் சொன்னால், ஞானிகளின் நிலையை அடையாத நாம் எல்லோருமே, சிறுவர்களைப் போலத்தான். நமது அறிவு வளர வளர, நாம் ஞானிகளின் நிலையை அடைவோம். வளர்ச்சிக்கு ஏற்றவாறு, நமது தேவைகள், விருப்ப – வெறுப்புகள், இன்ப–துன்பங்கள், குறிக்கோள்கள் எல்லாமே மாறிவரும்.

சுருக்கமான பதில்: நம்முடைய சிறிய அறிவில் சரியான பதில் தரமுடியாது. ஊகித்தால், நம்மைப் படைத்த கடவுளிடம், *பிரம்மாவுடன் கை குலுக்க விரும்பலாம்.*

குறுகிய காலத்தில் நாம் யோகிகளின் சக்தியை அடைய என்ன செய்ய வேண்டும்?

யோக சக்திகளை அடைவது மிகவும் சுலபம். இத்தனை சுலபம் என்று நம்புவதுதான் கடினம்.

அதிலும், ஞானியாக வேதங்களையோ, உபநிஷதுகளையோ கரைத்துக் குடிக்க வேண்டாம். போன்ற எந்த அறிவையும் புதியதாக கற்க அவசியம் இல்லை என்றே சொல்லலாம். தாடி, ஊசிமேல் நின்றபடி தவம், காடு, மலை என்று எதுவுமே அவசியம் இல்லை.

மிக மிக கடினமான பாகம், நாம் கற்பது இல்லை. மாறாக இதுவரை கற்றவைகளை மறப்பது அல்லது மறுப்பது.

எந்த சக்தியும் ஆக்கத்திற்கு மட்டும் இல்லாமல் அழிவிற்கும் பயனாகும். அருளுக்கு மட்டுமில்லாமல் பொருளுக்கும் பயன் தரும். ஆகையால், கீழே கண்ட உண்மையில் உறுதியாக இருக்க வேண்டும்.

நமக்கு கிடைக்கும் சக்தியைத் தீய வழிகளில் செல்ல விடாமல், பொருள் உலகத்திலும் உபயோகிக்காமல், மிகவும் அரியதான, உயர்ந்த அறிதவை – அறிவை – அடைவதற்காக மாத்திரமே பயன் படுத்துவேன். தவறினால் மிக மோசமான முடிவை அடைவேன் என்று உணர்ந்துள்ளேன். பொருள் உலகத்திலோ அல்லது எந்த தவறான வழிகளிலும் இந்த ச க்திகளைப் பயன் படுத்துவதால் அடையும் பின் விளைவுகளை நான் அறிவேன்.

இப்போது வழிகளைத் தேடுவோம்.

## தேடல்கள்

ஞானம் – விஞ்ஞானம் இரண்டிலும் முக்கியமாக நடந்தேறுவது என்னவோ தேடல்கள்தான். ஆகையால் நாமும் தேடலாம், இப்போது, காட்டிற்குள் ஓடாமல், தாடியில்லாமல் யோகியின் சக்திகளை அடைவது எப்படி என்று தேடுவோம்.

யோக சக்தி, யோகியின் சக்தி, சாமியாரின் சக்தி, அஷ்ட சித்திகள், எல்லாமே ஒன்றுதான். பல நாள் காட்டில் மறைந்து வாழ்ந்தவர் ஒரு சாமியாரின் மாணவரானார். குருவின் வழிகாட்டுதலில், நீண்ட யோக பயிற்சி ஒன்றை

மேற்கொண்டவர், ஒரு நாள் யோக சக்திகளை தாம் அடைந்ததை உணர்ந்தார். ஆனாலும் ஆனந்தத்திற்கு பதிலாக அதிர்ச்சியே அடைந்தார் ஏன் என்று பார்ப்போமா?

## அத்தியாயம் 19

# கதை – ஒரு யோகியின் அதிர்ச்சி

ஒரு கதையுடன் இந்த அத்யாயத்தை, அதிரடியாகத் தொடங்குவோம். இந்த கதையின் கதாநாயகர் நடுவயதை தாண்டிய மனிதர் ஒருவர். பொருளாதார உலகில் தன்னிடமிருந்த பொருள் எல்லாவற்றையுமே இழந்துவிட்டு பிழைக்க வேறு வழியே தெரியாமல் ஒரு காட்டிற்குள்ளே ஓடினார்.

பல நாள் காட்டிற்குளே சுற்றித்திரிந்தார். ஒரு நாள் தான் பார்த்த, ஒரு சாதுவைச் சரணடைந்தார். பல நாட்கள் காக்க வைத்த இந்த சாது, ஒரு நாள், மனம் இறங்கி, யோகியாக மாறுவது எப்படி என்று சொல்லிக் கொடுத்தார்.

அவர் விவரித்தது, பின் வருமாறு:

கண்களை மூடு; படிப்படியாக ஒவ்வொன்றாக ஐந்து புலன்களில் வரும் செய்திகளை மனதை நெருங்காதவாறு செய்வது முதல் கட்டம் என்றும், இதுவே தியானத்தின் அடிப்படை. இதை மனதில் கொண்டு செயல்பட அறிவுருத்தினார்.

அதற்கு பல வழிகள் உண்டென்றும், தியானப் பயிற்சி ஒரு சுலபமான வழி என்றும் கூறினார். எல்லாம் சரிதான், இதை நடை முறையில் செயல்படுத்துவது எப்படி? அதையும் விவரித்தார்.

மனதில், ஏதாவது ஒரு பொருள், உருவம், உருவப்படம், விளக்கில் தெரியும் தீச்சுடரின் மத்தியபாகம் இவைகளில் ஒன்றை தேர்ந்து எடுக்க வேண்டும். பின்னர் கண்களை மூடி இந்த உருவத்தை, அல்லது பொருளை மாத்திரம் தனது கண்களை மூடியவாறு தன் இரண்டு புருவங்களின் மத்தியில், மனக்கண் முன்னால், அதை நிறுத்த வேண்டும்.

ஆரம்ப கட்டத்தில், பயிற்சி செய்யும்போது, சில வினாடிகள் கூட இந்த உருவம் மனதின் கஙளின் முன்னால் நிற்காது. இந்த உருவத்தை மீண்டும் மீண்டும் கண்ணினால் கண்டு,. பிறகு கண்களை மூடி திரும்பவும் மனக்கண் முன் கொண்டு வரவேண்டும்.

விடாது பயிற்சி செய்யும் போது, நாம் சில வினாடிகளிலிருந்து முன்னேறி, சில நிமிடங்கள் வரை மனக்கண் முன்னால் உருவம் நீடிப்பதை உணரலாம்.

நாம் விரும்பாமல் இந்த உருவம் மறையாது என்று நிலை வரும் வரை இந்த பயிற்சியை விடாது தொடரவேண்டும்.

இரண்டாவது கட்டமாக நாம் விரும்பியதன் பேரில், இந்த உருவத்தை மறையச் செய்வது அடுத்த, கடினமான ஒரு கட்டம். இதை பயிற்சியைச் செய்துவா என்றார், என்றார்.

நமது கதாநாயகன், துறவியின் வார்த்தைகளில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்ததினால், ஒரு மரத்தின் அடியில் அமர்ந்து, பல நாட்களாக (மாதங்களோ, வருடங்களோ) இந்த தியானப் பயிற்சியைத் தொடர்ந்தார்.

இடையில், ஒரு நாளும் பசியோ, வேறு எந்த உணர்வுகளும் அவரைத் துன்புருத்தியதில்லை. ஒரு நாள் திடீரென்று கண் விழித்தவருக்கு, ஒரு விரும்பத் தகாத ஒரு அனுபவம் காத்திருந்தது. இந்த மனிதர் அமர்ந்திருந்த இடத்தின் மேலே, மரத்தின் ஒரு கிளையின் மீது அமர்ந்திருந்த கொக்கு ஒன்று இந்த மனிதரின் மீது எச்சமிட்டது.

நமது கதாநாயகன், இதனால், எரிச்சலும் கோபமும் அடைந்தார். தனது சுட்டெரிக்கும் பார்வை ஒன்றை கொக்கின்மீது வீசினார். அடுத்த வினாடி. இந்த அப்பாவிக் கொக்கு எரிந்து சாம்பலாக அவர் முன்னால் விழுந்தது.

இந்த மனிதருக்கு இரண்டு திருப்தி. தன்னை அசுத்தம்

செய்த கொக்கைப் பழிவாங்கியதில் மகிழ்ச்சி.

இரண்டாவது, தனக்கு அமானுஷ்ய சக்திகள் கிடைத்ததில் இரட்டிப்பு மகிழ்ச்சி. கொக்கிற்கு இந்த மனிதருடன் என்ன தனிப்பட்ட விரோதமா?

இந்த மனிதர், அந்த கொக்கின் இடத்தை அடைந்து, அது வழக்கமாக செய்யும் ஒரு செயலில் தான் மாட்டிக் கொண்டார். அதில் கோபம் கொண்டு, தனக்கு கிடைத்த புதிய சக்தியால் அதை அழித்தார். அழிவில் கவலை கொள்ளாமல், மகிழ்ந்து ... இதெல்லாம் நியாயமா?

அதனால் தான், எந்த சக்தியையும் அடைந்திட எல்லோருக்குமே ஆசைதான். சக்தியில் ஆக்க சக்தி அழிக்கும் சக்தி என்று தனியாக இல்லை. அறிவில்லாதவர் கையில் கிடைத்த ஒரு ஆக்க சக்தி அழிக்கும் சக்தியாக உருமாறும். அவ்வளவுதான்.

உலகப்போரும் சரி, உள்ளூர்ச் சண்டைகளும் நிகழக்காரணம், பெரும்பான்மை மக்கள் இல்லை. ஒரு சிலரே ! நாம் நமது சக்திகளை ஒன்றாகத் திரட்டி, ஒரு பெரும் சக்தியாக மாற்றி, நமது மக்கள் தலைவர்களாக, நாட்டின் தலைவர்களாக உருவாக்குகிறோம். அதில் சில *தவறான தலைவர்கள்* நாடு களிடையும், மக்களிடையும் போர்களுக்கும் அழிவுகளுக்கும் காரணம் ஆவதில்லையா?

அறிவு இல்லாதவர் அடையும் எந்த சக்தியும், அவரையும் அவரோடு இணைந்த மற்றவருக்கும், தவறாது, அழிவையும் தொல்லைகளையும் தரும்.

ஆகவே மனிதன் உயர்ந்த சக்திகளை அடையும் முன்னால் தனது மனதை உயர்ந்த நிலையை அடையச் செய்வது அவசியம், மனதைத் தூயதாக்கி, அன்பு, மனித நேயம், எல்லா உயிர்கள் மீதும் கருணையும் கொண்டவராக மாறுவதும் அவசியம் என்பதை உணர வேண்டும்.

இப்போது, கதைக்குத் திரும்புவோம்.

பல நாள் யோக சாதனையில் ஈடுபட்டு விழித்து எழுந்தவருக்கு, இப்போது அசுரத்தனமான பசி. இந்திய மண்ணில், அந்தக் கடந்த காலங்களில் யாசகம் கேட்டு வருவோரை. அதிலும் சிறப்பாக சாதுக்களை, விருந்தினராக வரவேற்று உணவு தருவது தலை சிறந்த செயலாகக் கருதப்பட்டது.

முதல் முதலாக கண்ணில் கண்ட ஒரு வீட்டை அடைந்து வீட்டின் கதவை தட்டி, உணவுக்காக தான் வந்திருப்பதாக அறிவித்தார். கதவை திறந்த பெண்மணி விருந்தினரை காத்திருக்க சொல்லிச் சென்றவர், உடனடியாக உணவோடு திரும்பாததால், கோபம் கொண்டார்.

இந்த பசி பொருக்காதவர், சிறிது நேரம் கழிந்த பின்னர் உணவுடன் வந்த பெண்மணியை நோக்கி, கோபம் கொப்பளிக்க, கொக்கை பார்த்த அதே பார்வையை, வீசினார்!!

இவருடைய பார்வை இந்த பெண்மணியை எந்த விதத்திலும் பாதிக்கவில்லை. மாறாக, இந்த மனிதனின் பார்வைக் கண்டு புன்னகைத்த பெண்மணி, என்னை என்ன, கொக்கு என்று நினைத்தீரோ என்றாள்.

இந்த அமேச்சூர் யோகிக்கு இடி ஒன்று தன் தலையில் இறங்கியது போல ஒரு உணர்வு. சற்று நேரம் முன்னால் காட்டின் உள்ளே நடந்தது இந்த வீட்டிற்குள் இருந்த பெண்மணிக்கு எப்படித் தெரியும்?

இந்த கேள்வியை அவர் கேட்காமலே, அந்த பெண்மணி பதில் தந்தாள். சில மைல் தொலைவிலுள்ள ஒரு ஊரின் பெயரைக் குறிப்பிட்டு, அங்கே செல்லும்படி கூறினாள். அந்த ஊரிலுள்ள ஒரு மனிதரின் பெயரைக் குறிப்பிட்டு, அவரைக் கண்டு பேசினால், தேடும் கேள்விகளுக்கு விளக்கம்

கிடைக்கும் என்று சொல்லி வீட்டினுள் மறைந்தாள்.

நமது புதிய யோகி, கிடைத்த உணவை சாப்பிடக் கூட நினைவில்லாது, ஒட்டமும் நடையுமாக பெண்மணி குறிபிட்ட ஊரை அடைந்தார். அந்த மனிதரைத் தேடி கண்டுபிடித்த போது அவருடைய அதிர்ச்சி மேலும் அதிகரித்தது.

விபூதி பட்டை, குங்கும பொட்டு சகிதமாக மத சின்னங்களையும் அணிந்த அந்த மனிதர், கசாப்பு கடையில் மாமிசம் வெட்டி அளந்து விற்றுக் கொண்டிருந்தார்.

இந்த புதிய யோகியை வரவேற்ற அந்த மாமிச வியாபாரி, அடுத்த ஊர் பெண்மணியைக் குறிப்பிட்டு, அவர் நலம் விசாரித்தார். பிறகு அந்த பெண்மணி சொல்லியே தன்னைக் காண யோகி வந்திருப்பதையும், வந்த காரணத்தையும் தானே சொன்னார்.

இதை எல்லாம் கேட்ட பிறகு, இந்த புதிய முனிவர், பிளந்த தன் வாயை மூடவில்லை. கசாப்புக்கடை மனிதர் தொடர்ந்தார்.

யோகியாக பரிணமிக்க ஒன்று இரண்டல்ல பல ஆயிரம் வழிகள் உண்டு. நானும், தாங்கள் கண்ட அந்த பெண்மணியும் கடமை என்ற (கீழை நாட்டி ஞானிகள் அறிந்திருந்த முக்கியமான நான்கு பாதைகளில் ஒன்று) பாதையில் ஒன்றில் வாழும் யோகிகள்.

நாங்கள் மனதைக் கட்டுப்படுத்தும் யோக சாதனைகளோ (ராஜயோகா) , இறைவனிடம் சரணடைவதோ (பக்திப்பாதை) இல்லை. பல கிரந்தங்களைக் கற்று ஆராய்ந்து இறைவனை அறிவின் மூலம் அறிந்து மனக் கண்ணால் காணும் வகையும் (ஞானப்பாதை) இல்லை.

மிக எளிமையான பாதை இது, என்று விளக்கினார்.

சமூகம் தங்களுக்கு அளித்த கடைமைகளைச் செய்வதைத்

தவிர வேறு சிந்தனைகள் ஏதும் இல்லாதவர்கள். காலையில் நீங்கள் சந்தித்த பெண்மணி தனது குடும்பத்தை, கணவன் மற்றும் கணவனின் வயதான பெற்றோரைச் சிறந்த முறையில் பராமரிப்பதைக் கடமையாக கொண்டவர்.

உலகில் வேறு எந்த சிந்தனையோ செயலையோ அவர் உயர்வாகக் கருதவில்லை. காட்டில் நுழைந்து கடும்தவம் செய்த முனிவர்களுக்கு உள்ள சக்தி இந்த பெண்மணியின் சக்திகளைவிட எந்த விதத்திலும் உயர்வில்லை.

நீங்கள் கோபம் கொண்டு ஒரு கொக்கை சுட்டெரித்தது ஒரு பாபச்செயல். அதில் நீங்கள் பெற்றதாக உணர்ந்த சக்தி மிகவும் தாற்காலிகமானது.

அப்பாவிக் கொக்கு அழிந்தது. இது மற்ற யோகிகளிடம் நடக்காது. இந்த விதமாக, சக்தியைத் தவறாகப் பயன் படுத்தினால் தாங்க முடியாத எதிர் விளைவுகளைச் சந்திகிக்க நேரிடும். அதைத் தான், அந்த பெண்மணி, சூசகமாக கூறினார் என்று முடித்தார்.

அந்த பெண்மணி சாதாரண மக்களின் பார்வையில் ஒரு மிகச் சாதாரண மனிதரின் ஒரு மிகச் சாதாரண மனைவி. இருவரும் தங்கள் கடமையை மாத்திரமே கருத்தில் கொண்டுள்ளோம். இதுவும் ஒரு வகையில் யோக சாதனையே என்றார்.

மிகப் பெரிய சக்தி கொண்டு, என்னவெல்லாம் செய்யலாம்? தன்னைத்தானே அறிந்துகொள்வது. இந்த அகில அண்டத்தை அறிவது. அந்த அண்டத்திற்கும் இந்த மனிதனுக்கும் உள்ள தொடர்பை உணர்வது.

தனக்கும் இந்த அண்டத்தை படைத்தவனுக்கும் உள்ள அறிவை உணர்வது போன்ற பெரிய குறிக்கோளுடன் ஞானப்பயணம் மேற்கொள்வதே நன்மை தரும் என்றும் கூறினார்.

கொக்கைச் சுட்டெரித்தவருக்கு புரிந்தது. ஆனால்

உங்களுக்கு புரிவதுதானே முக்கியம்.

ஐயா, இந்த தடைகளையும் மீறியாகிவிட்டது. அடுத்து என்னவோ?

குறுக்குப் பாதையில் ஆன்மிகத்தில் குதிப்பதற்கு ஒரு கடைசிக் கட்டமாக, மிகவும் முக்கியமான ஒரு வேலை.

யோக சாதனைகள் அதிகமாக சக்தியை பயன் படுத்துவதை அறிவோம். நீண்ட நாள் பயணமாக நாம் குடும்பத்துடன் காரில் செல்ல திட்டமிட்டால் செய்வது என்ன? வண்டியயை சர்வீசிங் செய்ய வைத்து, சக்கரத்தில் தேவைப்படும் அளவில் காற்றை அடித்து, அதோடு பெட்ரோல் அல்லது டீசல் டாங்க் புல் செய்வது போலத்தான் ஆன்மீக பயணத்திற்கான நடவடிக்கைகள்.

உடற்பயிற்சி, மற்றும் தீவிரமான மூச்சுப்பயிற்சிகள் மனிதனின் தூல, மற்றும் சூட்சும உடலை – சக்தி மிகந்ததாக செய்வதை ராஜ யோகிகள் அறிவார்கள். இவைகளை முறையாக செய்து வந்தால், நோயின்றி பொருள் உல்கத்தில் வாழலாம், அருளுலகத்திற்கும் இந்த சாதனைகளுக்கும் மிக அவசியமாகும்.

ஸ்வாமி ராம்தேவ் என்ற துறவி பரப்பிவரும் இந்த யோக விஞ்ஞானம் அலோபதி மருத்துவம் சரி செய்யமுடியாத பல வியாதிகளை சரி செய்திருப்பது இன்று உலகம் அறிந்தது. நம்பிக்கையுடன் தீவிரமாக பயிற்சி செய்து வந்தால் கிடைக்கும் ஆரோக்கியம் வார்த்தைகளால் விளக்க முடியாது.

சூக வயதை எட்டிய எனது தலைமுடி முழுவதும் வெளுத்திருந்த நிலையில், இப்போது ஆங்காங்கே கறுத்து வருகிறது என்ற சிறிய உதாரணம் ஒன்றே போதுமானது.

இப்போது நாம் அவசியமான சக்திகளை யோக விஞ்ஞானம் மூலம் அடைந்து விட்டோம். அடுத்து, நமது மனதை தயார்

நிலைக்கு கொண்டு வர வேண்டும்.

சாதாரணமாக அதிக வருடங்கள் பிடிக்கும் இந்த கட்டத்தை நாம், விஞ்ஞானத்தின் துணை கொண்டு, இன்று வெகு விரைவாக கடக்க மு டியும். அடுத்ததாக அதை அலசுவோம்.

## உடலைப் பட்டினி போடுதல்

நாம், ஒரே ஒரு வேளை உணவில்லாவிட்டால் கூட ஒய்ந்து போகிறோம். உடல் நலத்திற்கும் மனநலத்திற்கும் ஆரோக்கியமான உணவு அவசியம் என்கிறார்கள் மருத்துவர்களும். ஆராய்ச்சியாளர்களும்.

ஆனால், நம்மவூர் சாமியார் வருடக்கங்களாக சமாதி நிலையை அடையும்போது, சாப்பிடுவதே இல்லையே. அது எப்படி?

கம்ப்யூட்டரில் உபயோகத்தில் இல்லாதபோது மின்சாரம் மிகக் குறைவாக செலவாவதற்கு ஒரு ஏற்பாடு உண்டு. உபயோகப்படுத்தாத சில நிமிடங்களில், கம்ப்யூட்டர் உறங்கிவிடும்.

கீ போர்டில் ஏதாவது ஒரு எழுத்தைத் தட்டினால் கம்ப்யூட்டர் உயிர் பெற்று, வழக்கம் போல, வேலை செய்யும். இடைப்பட்ட நேரத்தில் கம்ப்யூட்டர் மிக மிக குறைந்த அளவு மின்சாரம் மாத்திரம் எடுத்துக் கொள்ளும்.

அது போலவே மனிதருக்கு சமாதி நிலையிலும் குறைந்த அளவு சக்தி தேவைப்படும். நாம் உண்ணும் உணவில், மிக மிக சிறிய அளவு மாத்திரமே உடலுக்கு தேவைப்படும் சக்தி இருப்பதும் மற்றவை எல்லாம் அவசியம் இல்லாதவை என்று அறிந்து கொள்ளலாம். நாம் அவசியத்திற்கும் அதிகமான உணவை உள்கொள்கிறோம். அது முழுவதாகப் பயன் படுவதில்லை.

மனிதன் உணவு உண்ணாவிட்டால் என்னவாகும்?

எந்த உடலும் பலகோடி உயிர்களால் ஆனது. மனிதன் உணவு தராவிட்டால், அந்த சிறிய உயிர்கள், தானாகவே தம் உணவைச் சம்பாதிக்கிறது.

ஆரா எனப்படும், இந்த உயிருடல் ஞானிகளுடைய உடலை மையமாக கொண்டு பல அடி தூரம்வரை வியாபித்திருப்பதை விஞ்ஞானிகள், கருவிகள் மூலம் அறிகிறார்கள். சில பயிற்சிகள், இந்த உயிருடலைப் பலமுள்ளதாகச் செய்கிறது.

அத்தியாயம் 20

# விஞ்ஞானமும் மெய்ஞானமும்

ஞானிகளும் – விஞ்ஞானிகளும் முன்னேற்றம் அடைய அவசியாமான கட்டம், அறிந்ததை மறுப்பது அல்லது மறப்பது. அன்–லெணிங். (Unlearning).

அடுத்ததாக, கற்பது, கற்றதை சிந்திப்பது. இது சீன தேச த்தில் ௪௦௦௦ வருடங்களுக்கு முன்னால், ஞானிகள் சொன்னது. நமது விஞ்ஞான வளர்ச்சியை நமக்கு சாதகமாக பயன் படுத் திக்கொள்ள முடிந்தால், ௨௦ நாளில் சாமியாராவது எப்படி என்று ஒரு தொலைகல்வி மூலம் ஞானிகளை உருவாகலாம். அவ்வளவு சுலபம்.

ஒரு சில நூற்றாண்டுகளுக்கு முன்னால் விஞ்ஞான வளர்ச்சிகள் சாதாரண மக்களை வந்து அடையவில்லை. ஆனால், இன்றோ, செல்போன், டெலிவிஷன், சாடிலைட், விண்வெளிப் பயணம் போன்ற கண்டுபிடிப்புகளின் விளைவாக இன்று மனிதனின் சிந்திக்கும் பரிமாணங்கள் பல மடங்கு அதிகரித்து இருக்கிறது.

இதனால் பலநூறு ஆண்டுகளாக மனிதன் யூகியத்தும் நம்ப இயலாத பல விஷயங்களை இன்றய மனிதன் கண்டும் உணர்ந்தும் அறியலாம். அதன் காரணமாக, பல நம்பமுடியாத விஷயங்களை இன்று யூகித்து அறிவதும் எளிதாகிவிட்டது.

இன்றுள்ள விஞ்ஞான அறிவு வேகமாக மெய்ஞானிகளின் அறிவை நெருங்கி வருகிறாது. ஒரு கால கட்டத்தில் ஞானிக்கும் விஞ்ஞானிக்கும் உள்ள அறிவின் வித்யாசம் குறைந்தே இருக்கும்.

அன்றும் இன்றும் மெய்ஞானிகளின் வளர்ச்சியில் தடையாக இருந்ததற்கும், இன்றும் அது தொடர்வதற்கும் காரணம் – அவித்யா, அல்லது தவறாக அறிந்ததைத் தலையில் சுமப்பதே!

இன்றய விஞ்ஞான வளர்ச்சி வியப்பூட்டும் ஒன்று. நியூட்டன் காலபௌதிகம், கண்ணால் காணக்கூடிய பொருள்களோடு நின்று விடுகிறது.

அந்த நிலையை கடந்த, ஐன்ஸ்டீன் பௌதிகம் கண்ணில் காணாத அறிவில் வந்து நிற்கிறது.

அதோடு முக்கியமாக மனிதனின் விஞ்ஞான அறிவில் உருவான, பல கண்டுபிடிப்புகளும், மனித வாழ்க்கை, உலகம் மற்றும் அண்டம் இயங்குவதின் பிரதிபலிப்பாக இருப்பதை காணலாம்.

இந்த அறிவு, மெய்ஞானிகள் பல வருடங்கள் தனியாகவும் கூட்டமாகவும் உழைத்து, உடைத்தெறியும் அறிவதில் உள்ள தடைகளை, இன்று, விஞ்ஞான உதவியுடன் அதிவிரைவிலே – சில நாட்களில் அல்லது சில நிமிடங்களில் கூட உடைத்து விட முடியும்.

நான் நேரில் கண்டு உரையாடிய ஒரு ஞானி, ஸ்மாமி ராமா, சமீப காலத்தைச் சேர்ந்தவர். அவரைப்பற்றி இன்டெர்னெட்டில் தேடிப் படியுங்கள்.

ஸ்வாமி ராமாவின் சொற்பொழிவுகளில், கட்டுரைகளில் மிகவும் சுவாரசியமான விஷயங்கள் கொட்டிகிடக்கின்றன.

ஸ்வாமி ராமாவின் (லிவிங் வித் ஹிமாலயன் மாஸ்டர்ஸ் என்ற) சுய சரிதையில் ஞானிகளின் விஞ்ஞான அறிவு மற்றும் சாதனைகளை அறிந்து கொள்ளலாம்.

## அகோரி பாபா செய்த அற்புதம்

இன்று பௌதிக விஞ்ஞானத்தின் வளர்ச்சியில், சப்–அடாமிக் பார்டிகிள் பற்றிய அறிவில் மனித இனத்திற்கு பயன்படும் எதுவும் கண்டுபிடிக்கப்படவில்லை.

ஆனால், அகோரி பாபா என்ற ஞானி, மாணவராக இருந்த ஸ்வாமி ராமாவுக்கு, இறந்தவர் உடலிலிருந்து எடுக்கப்பட்ட மாமிசத்தை ரஸகுல்லாவாக மாற்றித்தருகிறார். இதில் விஞ்ஞானம் என்ன இருக்கிறது? இன்று, உங்களைப்போல, என்னைப்போல, பலரால் நம்ப முடியாத உண்மை.

அங்கே, சிவன்—சக்தி என்ற தத்துவத்தில் விஞ்ஞானம் வெளியாகிறது. ஒரு கட்டத்தில், அணுவைத் துளைத்து அதன் சிறிய பாகத்தை அடையும்போது, ஒரு வித்தியாசமான அனுபவம். அந்த சிறிய பொருள், திடப்பொருளாக சில நேரமும், எனர்ஜி அல்லது சக்தியாக சில நேரமும் காட்சி தருகிறது. சிவனடியார்கள் சொன்னபடி, அர்த்த — நாரீசுவராக, சிவன் காட்சி தருவது இதைத்தானோ!

ஒரு பொருளைச் சக்தியாக மாற்றுவதும், அந்த சக்தியை வேறு ஒரு பொருளாக மாற்றும் வித்தையை, அல்லது விஞ்ஞானத்தை உலகில், மொத்தம் பதினொன்று ஞானிகள் அறிவார்கள் என்று நம்பப்படுகிறது.

## இல்லாத ஒரு புத்தகம்

அப்போது, 1984 ம் வருடம், அதற்கு சுமார் 50 வருடங்களுக்கு முன்பு, லண்டனில், கடைசியாக பதிப்பான ஒரு புத்தகம் பல மாதங்கள் தேடியும் கிடைக்கவில்லை. லண்டன் நகரில் இயங்கிவரும் க்வீன் விக்டோரியா நூலகத்தில் ஒரு பிரதி இருந்ததாக நண்பர் மூலம் அறிந்தேன்.

சில மாதங்கள் கழித்து புத்தம் புதிய பிரதி ஒன்று (எந்த வருடம் பதிப்பிக்கப் பட்டது போன்ற விவரங்கள் எதுவும் இல்லாதது முன் பின் அறியாத ஒருவர் மூலம் எனக்கு கிடை த்தது. நான் படித்து முடித்தபின் மாயமாக (என் நண்பர் ஒருவர் கொண்டு செல்லும் போது) மறைந்தது. புத்தகத்தின் பெயர் — திபேத்தியன் புக் ஆப் டெட் .

மேலும் பல வருடங்கள் கழித்து ஒரு புதிய பதிப்பு வெளியானதாக அறிந்தேன். இதற்கு இடைப்பட்ட

வருடங்களில் பதிப்பு எதுவும் இல்லை என்றும் உறுதியானது.

இதைத்தான் தவ வலிமை என்கிறார்களோ?

சுருக்கமாக. தவத்தின் தீவிரத்தை எப்படியெல்லாமோ விவரித்தார்கள், ஊசியின் மேல் நின்று செய்வது, ஒரு காலில் நின்று பலவருடங்களாக தவமிருப்பது, உணவும் உறக்கமும் இல்லாமல், விடாமல் மனதில் அல்லது சிந்தனையில் கொள்வதை தவம் என்கிறோம்.

தவத்திற்கு ஒரு தடை – மாயை. இது நம் தலையில் அழுக்கைச் சேர்ப்பித்து, இதை நம்பாதே என்று நமக்கு சொல்லும்.

இது மாத்திரம் போதுமா? இதனால் பலன் கிடைக்குமா எனற சந்தேகமே நம் மனதை ஆட்டிப் படைக்கும்.

## விருப்பம் நல்லதாயிருக்க வேண்டும்

விரும்பியதை அடைவது எளிது என்பதை பல உதாரணங்களுடன் கதை கதையாக பெரியவர்கள் புரிய வைத்தார்கள். நாம் எதையுமே சரியாக புரிந்து கொள்ளாமல் விட்டுவிட்டோம்.

பல அசுரர்கள் (யார் இந்த அசுரர்கள்?) தனியாக அசுரர்கள் என்று யாரும் இல்லை. மாயையில் முழுகிய நாமே தான் இந்த அசுரர்கள் அசுர்– என்றால் சுரம் தப்பியவர்கள்.

புராணங்கள் இதிகாசங்களில் தேவர்கள் அசுரர்கள் என்று இருவித மக்களும் தவம் செய்வார்கள். அசுரர்கள், தவறான குறிக்கோளுடன் தவத்தில் நின்று வெற்றியும் பெற்றார்கள். தவத்தின் பலனாக பெற்ற சக்திகளால் நிகழ்ந்த விளைவுகள் என்ன? அதில் தானே அழிவார்கள் .

தவத்தில் வெற்றிபெற தவத்தில் நம்பிக்கை மற்றும் தீவிரம்

மட்டுமே போதும். தவத்தின் பயனை பெற்று நலம் பெற தூய எண்ணங்கள் மிக அவசியம்.

முடிவாக தாம் ஆளமுடியாத சக்தியை, ஆவலுடன் ஏற்றது. ஆள முடியாத சக்திகளைத் தேடுவதும், அருளுலக வெற்றிகளைப் பொருளுலகத்தில் கொண்டு செல்வது எல்லாமே, மனம் பக்குவம் பெறாதவர்களின் தேடுதல்கள்.

இதை மாற்ற தவம் மேற்கொள்ளும் முன்பு மாயை கலைவது அவசியம். பொருளுலகத் தேவைகள் மாயையின் வேலை. எனவே தவத்தில் வெற்றியோடு பயனும் பெற மாயையின் திரை விலகியே இருப்பது அவசியம்.

இதை எப்படி அடைவது என்று உங்களுக்குள்ளே தேடுங்கள்.

இறைவனை உனக்கு உள்ளேயே தேடு !

பல அறிஞர்கள் சொல்வது இறைவன் வெளியே இல்லை. இறைவனை உனக்கு உள்ளேயே தேடு.

உள் எது? வெளி எது?

நம் உள்ளே தேடினால் என்ன கிடைக்கும். அப்படி உள்ளே இருப்பது தான் என்ன ? குடல் இருதயம் நுரையிரல் கல்லீரல் ஆகியவற்றிலா இறைவனை தேடுவது?

இதை புரிந்து கொள்வது மிகவும் சிம்பிள்.

நம் ஐந்து பொரிகளால் அறிக்கூடியது இந்த மனிதனின் உடலின் வெளியே தான். இல்லையா?

வெளியே தேடமுடிந்த உலகம் மிகச் சிறிய உலகம். அது நாம் அறியக்கூடியதே, நாம் அன்றாடம் காணும் நம்மை சுற்றியுள்ள உள்ள உலகம். ஆனால் அண்டத்தில் உள்ள எல்லாவற்றையும் நாம் அறிய இந்த ஐந்து கருவிகள் பயன் தறாது. ஏன்? அறியும் கருவிகளுக்குள்ள எல்லைகள்.

## நமக்குச் செய்திகள் வருகின்றன !

நாமும் ஞானிகள்தான். ஞானிகள் தம்மில் தொடர்புகொள்ள டெலிபோன், செல்போன் அவசியமில்லை என்பதை அறிவோம்.

எப்போதாவது, நமக்கு மிகவும் நெருங்கியவருடன், டெலிபதி மூலம் செய்தி வந்த அனனுபவம் பலருக்கு இருக்கலாம். அது தற்செயசெயலாக, தன் இச்சையாக இல்லாமல் நிகழும் ஒன்று. இதுவும் மாயையின் வேலைதான்.

நமக்கு இயற்கையாகவே பிறருடன் பரிமாறிக்கொள்ள மின்சார உபகரணங்கள் அவசியமில்லை என்பதை அவ்வப்போது மாயை காண்பிக்கிறது.

அதுவுமில்லாமல், நமக்கு எச்சரிக்கைகள் வருகின்றன. நாம் கொண்ட தவறான அறிவு, அந்த செய்திகளை நம்மிடம் சேரவிடாமல் செய்கிறது. சேர்ந்தாலும், நாம் அதை உணர்வதில்லை. வரும் செய்திகளை அலட்சிய, செய்கிறோம். எனக்கு இந்த வழியில் கிடைத்த அனுபங்கள் கணக்கிலங்காது. அவைளில் இரண்டு மிக சமீபத்தியது.

## ஞானிகளுக்கு கிடைப்பது என்ன?

அறிவுப்பாதையில், பல தடைகளை தாண்டி வந்தவர்கள் ஞானிகள். இந்த தடைகளைக் கடக்க பெரும் விருப்பமும், ஆவலும் கடின உழைப்பும் தேவை. இவ்வளவு தடைகளைக் கடந்து வந்தவர்களுக்கு என்ன கிடைக்கும்?

மிக உயர்ந்த அறிவு. அதாவது பிரமனைப்பற்றிய அறிவு.

பொருளுலகக் கண்ணோட்டத்தில் இந்த வகை அறிவு, ஒரு பத்து காசுக் கூடப் பெறாது.

அது பலருக்கு தெரிந்திருக்கிறது. அதனாலோ என்னவோ, தானும் தன் சந்ததிகளும் இந்த ஆன்மிகப்பாதையில் வருவதை இவர்கள் விரும்புவதில்லை, இல்லையா?

துன்புறாதிருக்க மாயா செய்யும் வேலை.

## முடிவுறை

சுமார் நூற்று முப்பது பக்கங்களில் சொன்னதை, சுருக்கமாகச் சொன்னால், எப்படி இருக்கும்?

நாம் பிறந்து வாழ்வதும், நமக்காக இல்லை. நமது பிரம்மாவின் நலனுக்காக மாத்திரமே.

கடல் உள்ளவரை அலைகள் இருக்கும். அண்டம் உள்ளவரை கடல்களும், உயிர்களும் பிறவிப் பெருங்கடலில், நீந்திக்கொண்டே இருப்பது தப்பாது.

நான், வாசகர்கள், யானை, கொசு, ஈ, புழு, பூச்சி, பல்லி, மரம், செடி, கொடி, கடல் அலைகள், மலைகள், நட்சத்திரங்கள், சூரியன் சந்திரன் போன்ற கிரகங்கள் எல்லாமே பிரும்மாக்கள்தான். எல்லாமே, நமது பிரம்மாவின் உடல் பாகங்கள் தான். பல கோடி பிரம்மாக்கள் சேர்ந்து ஒரு அண்டமாகிறது. அண்டம் ஒரு பிரம்மா. பல அண்டங்கள் சேர்ந்து ஓர் பிரம்மாண்டமாகிறது.

பிரம்மாண்டம், பிரம்மாவின் பிரம்மா ! பிரம்மாவின் பிரம்மாவிற்கும் பிரம்மாக்கள் உண்டு.

அண்டங்கள் ஒரு அடுக்குத் தொடர்:

அடுக்கு மாடிகள் ஒன்றன்மீது ஒன்றாக அமைந்துள்ளது. ஆனால், அண்டங்கள் அடுக்கு அடுக்காக, அதே சமயம் ஒன்றன் உள் ஒன்றாக அமைந்துள்ளது. எல்லாவற்றுக்கும் மேல் தட்டில் இருக்கும் பிரம்மா தான் பரப் பிரம்மாவோ ! ஆராய்ச்சிகள் தொடர வேண்டும்.

இதை மக்கள் நம்புவது கடினம். இதை மனதின் கண்களினால் காண முடிந்தவர்கள் ஞானியாகிறார். காண முடியாதவர்கள் மாயையின் ஆளுகைக்கு உட்பட்டு பிறவிப் பெருங்கடலை நீந்தியவாறே இருப்பார்கள். அவர்களும் சில லட்சம் தடவை பிறவி

எடுத்து பின்னர் பிறவிக் கடலின் கரையைச் சேருவார்கள்.

இதைப் படிப்பதோடு உங்கள் சிந்தனைகள் நின்றுவிடக்கூடாது. தற்பொழுது, திருமூலரின் கவிதைகளில் ஆய்வைத் தொடர்கிறேன்.

நாம் ஞானியாக மாறினால், நமக்குக் கிடைப்பதென்ன?

அண்டத்தைப்பற்றி ஒரு திட்டவட்டமாக ஒரு ஐடியா கிடைக்கும். அப்படிக் கிடைத்ததால், வாழ்க்கையில் நாம் சந்திக்கும் பல நிகழ்ச்சிகள் – முக்கியமாக, துன்பம் தரும் நிகழ்வுகள், அற்ப சமாசாரங்களாகத் தோன்ற வாய்ப்பு உண்டு.

ஒன்றுமட்டும் நிச்சயம். காசு பணம் பொருள் பதவி ஆசைகள் ஞானியை அண்டுவதில்லை.

அப்படியானால், அமானுஷ்ய சக்திகளைக்கொண்டு என்னதான் செய்யலாம்? இது ஒரு பெரிய கேள்வியாக இருந்து வந்தது. இதற்கு ஒரு ஞானி பதில் தருகிறார்.

தொடரும் பிறவிகளிலும் அவர்கள் ஞானிகளாக வளர்ந்து சேமித்த அறிவை இழக்காமல் இருக்க உதவும் என்று நம்பப் படுகிறது. அதோடு, அடுத்தடுத்த பிறவிகளை, தாங்கள் விரும்பியபடி தேர்ந்தெடுக்கவும் இவர்களுக்கு ச ாத்தியமாகிறது. பல சித்தர்கள், இதே உடலோடு பலநூறு ஆண்டுகள் வாழ்ந்து பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகியவர்களைக் கண்டு கடைசியில் சிவனுடன் ஒன்றாகக் கலந்து தானே சிவனின் பாகமாக மாறிவிடுகிறார்கள் என்பதும் ஒரு நம்பிக்கை.

பொருள்களில் பற்று மனதில் மும்மலங்கள் ஆகியவற்றை சிறிதளவேயானாலும் அகற்ற தேவையான்ன மனப் பக்குவத்தை அடைய எனது எழுத்துகள் உதவியிருந்தால் எனது ஆராய்ச்சியின் மற்றும் எழுதியதன் முழுப் பலனை அடைந்துவிட்டதாக மகிழ்வேன்.

ஒரு வேண்டுகோள்:

இப்பவும், எப்பவும் இந்த புத்தகத்தில் கண்ட கருத்துகள் பற்றியும் உங்கள் விமரிசனங்கள், இந்த புத்தகத்தில் கண்ட கருத்துகளை உறுதி செய்யும் ஆதாரங்கள் மட்டுமில்லை, முக்கியமாக, வேறுபட்ட கருத்துகளையும் இணைய தளம் மூலம் வாசகர்கள் பகிர்ந்து கொள்ளலாமே!

## நடராஜன் நாகரெத்தினம்

பங்களூரு.

natarajan.naga@gmail.com

Books suggested to read:

(1) Living with Himalayan Masters by Swamy Rama.

(2) If you see Buddha on the road, kill him by Sheldon kopp.

(3) Tibetian Book of the Dead, Oxford University publication.

(4) சதுரகிரிகில் கோரக்க சித்தர் – பா. கமலக் கண்ணன் – வானதி பதிப்பகம்.

(5) திரு மூலரின் திரு மந்திரம் – ௩௦௦௦ பாடல்களுக்கு உரை.

(இண்டெர் நெட்டிலும் கிடைக்கிறது). ௧௦ புத்தகங்களாக கிடைக்கும் இடம்: பாபா கிரியா யோகா கேந்திரா, மல்லேஸ்வரம் பங்களூரு.

(௬) குமர குருபரின் பாடல்கள்.

(7) பாம்பாட்டி சித்தர் பாடல்கள்.

(8) பெரிய ஞானக் கோவை.

(9) சிவ ஞான போதம்.

(10) மின்தமிழ் இணைய தளத்தில் சிங்கை கிருஷ்ணன் எழுதிவரும் சித்தர்களைப் பற்றிய தகவல்கள் மற்றும் கட்டுறைகள்.

Readers may visit:

www.free-ebooks.Net/search/natarajan

For my ebooks.

